


இந்தியப் பெண்மணி
களின் மேனி வண்ணங்
களுக்குப் பொருந்தி மெரு
கூட்டுவதற்காக, லக்மேயின்
புதிய அல்ட்ரா சில்க் முகப் பவுடர்
விசேஷமாகத் தயாரிக்கப் பட்டுள்ளது.
இந்த முகப்பவுடர் உங்களை மணிக்
கணக்கில் எழில் கொஞ்சும்
தோற்றத்துடன் திகழச் செய்யும்.
நாள் முழுவதும் நீங்கள் எழில் வடிவமாக,
அழகுப் பிம்பமாகத் தோற்றமளிப்பீர்கள்.
அதன் இரகசியம்? அழகான புதிய
பெட்டியில் வரும் பரிபூரண ஒப்பனை

சாதனம்–லக்மேயின்
அல்ட்ரா–சில்க் காம்-
பாக்ட். இலேசாக அழுத்தப்
பட்டுள்ள இந்த அருமையான முகப்
பவுடர் உங்கள் மேனியை சீராகத்
தழுவி, ஒப்பனையை சிறப்பாகப்
பாதுகாக்கிறது.

லக்மே அல்ட்ரா-சில்க் பேஸ் பவுடர்
மற்றும் காம்பாக்ட் மேக்-அப் எட்டு
உள்ளங் கவரும் வண்ணங்களில் வருகிறது.
டெண்டர் சில்க், ஸாட்டின் சில்க், பேட் சில்க்,
ரோஸ் சில்க், பீஜ் சில்க், கோல்ட் சில்க்,
ஸம்மர் சில்க், நாச்சுரேல் சில்க்.

# கல்கி

## பொருளடக்கம்

பரிதாபி, மார்கழி 24 — 1973 ஜனவரி 7





| சந்தா விவரம் | ஒரு வருடம் | ஆறு மாதம் |
|---|---|---|
| இந்தியா | ரூ. 23-00 | ரூ. 11-50 |
| இதர நாடுகள் | ரூ. 50-00 | ரூ. 25-00 |
| இலங்கை (இலங்கை நாணயம்) | ரூ. 27-00 | ரூ. 13-50 |

மேலட்டை வண்ணப்படம்: கே. எஸ். ராமானுஜம்












# திரு கே. எஸ். வேணுகோபால்

## சென்னையின் புதிய துணை ஷெரீப்

ஆர்வமிக்க இளம் தொழில் பிரமுகராகிய **திரு கே. எஸ். வேணுகோபால்** 1973ம் ஆண்டுக்கான சென்னை துணை ஷெரீபாக நியமிக்கப்பட்டிருக்கிறார். இந்தப் பதவியை இதுவரை வகித்தவர்களில் இவரே வயதில் மிகவும் இளையவர்.



சென்னை — 81ல், 14, சூர்யநாராயண செட்டித் தெருவிலுள்ள யுனைடெட் இந்தியா ரோலர் ப்ளவர் மில்ஸ் பிரைவேட் லிமிடெட்டின் டைரக்டர்களில் ஒருவர் திரு வேணுகோபால். இவர் யுனைடெட் இந்தியா ரோலர் ப்ளவர் மில்ஸ் பிரைவேட் லிமிடெட்டின் மானேஜிங் டைரக்டரும், முன்னணித் தொழிலதிபர்களில் ஒருவருமான திரு கே. ஸ்ரீநிவாசனின் மைந்தராவார்.

திரு வேணுகோபால் 1948 அக்டோபர் 20ந் தேதி சென்னையில் பிறந்தவர். சென்னை—1ல் உள்ள ஸெயின்ட் மேரீஸ் உயர்நிலைப்பள்ளியில் பள்ளிப் படிப்பை முடித்தார். லயோலா கல்லூரியில் காமர்ஸ் (வர்த்தகம்) பட்டத்துக்குப் படித்துத் தேர்ச்சி பெற்றார். அக்கல்லூரி மாணவர் சங்கத் தலைவராகப் பணியாற்றியிருக்கிறார்.

திரு வேணுகோபால் வர்த்தகத்தை முன்னிட்டும், ஆராய்ந்தறியும் நோக்குடனும் ஐரோப்பா முழுவதிலும், மேலும் தூர கிழக்கு நாடுகளிலும் விரிவாகச் சுற்றுப் பயணம் செய்திருக்கிறார். இதனால் நேரடியான விஷய ஞானமும், போதிய அநுபவமும் பெற்றிருக்கிறார்.

கல்கி

மலர் 32
இதழ் 23



தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா
— பாரதியார்

# எங்கும் நிறைந்தார்; என்றும் வாழ்வார்!

**உ**லகம் அநாதையாகிவிட்டது !

இக வாழ்வு அக வாழ்வு இரண்டுக்கும் வழி காட்டும் சிகர தீபமாக, முந்நூறு கோடி மக்களுக்கும் முதல்வராக, மனித குலத்தின் மாபெரும் வெற்றியாகத் திகழ்ந்த மகாபுருஷர் ஒரு மகோன்னத சகாப்தத்தையும் தம்மோடு எடுத்துக் கொண்டு பரம புருஷனில் இரண்டறக் கரைந்து விட்டார்!

அந்தப் பரம ஞானிக்கு இகவாழ்வும் அக வாழ்வும் வேறு வேறாக இருக்கவில்லை. அவருக்குத் தெரிந்ததனைத்தும் அகண்டமான ஒரே சத்தியப் பொருள் தான். அகண்ட சத்தியமானது தனி வாழ்வு, சமுதாய வாழ்வு, ஆத்மிகம், இலக்கியம், கலாசாரம், அரசியல் என்றெல்லாம் எல்லைகளை வகுத்துக் கொள்ளும் போது பிறக்கிற அழகு மயமான ஒழுங்கினைத்தான் தர்மம் என்கிறோம். அந்த ஒழுங்கின் முழு வடிவாக, தரும விக்கிரகமாக வாழ்ந்து இந்தக் கலி மலிந்த மண்ணைச் சுமார் ஒரு நூற்றாண்டு தூய்மைப்படுத்திய தெய்வ மனிதர், அல்லது மனித தெய்வமே ராஜாஜி.

தன்னில் தானே தெய்விகமான ஒன்று உலகை விட்டு, உடலை விட்டுத் தான் தெய்வத்தைச் சேர வேண்டும் என்பதில்லை.

ஆயினும் உடல் என்று ஒரு பாண்டம் உண்டானால் அது ஒரு காலத்தில் உடைந்து, உலகை விட்டுப் போகத் தான் வேண்டும் என்பது பராசக்தி வகுத்துள்ள நியதி.

மானுட காயத்தில் உலவிய ராம பிரானும், கண்ணபெருமானும், ரிஷி புங்கவர்களும், வள்ளுவரும், சங்கரரும், ராமாநுஜரும், புத்தரும், இயேசுநாதரும், நபிகள் நாயகமும், காந்தி அடிகளும் தங்கள் தேகத்தை ஒரு நாள் உகுக்கவே செய்தனர். ஆயினும் அவர்கள் இன்றும், இனி என்றும் நமக்கு உறு துணையாக நிற்கவில்லையா ? இன்று அவர்களின் உடலுக்கு உண்டான மரணத்தை எண்ணி எவரேனும் வருந்துகிறோமா?

அந்த யுக புருஷர்கள் அனைவரையும் வடித்து வார்த்த சாரமாக வந்து வாழ்ந்த ராஜாஜிக்கு ஏது அழிவு ? உடலின் அழிவோடு முடிகிற வாழ்வா அன்பிலும், அறிவிலும், திரத்திலும், தியாகத்திலும் முற்றிச் செழித்த அந்த மகா காவியம்? சரித்திர நாயகரான ராஜாஜியின் சரித்திரம் முடிவுறாத ஒன்று. அவர் எங்கும் நிறைந்த பொருளில் கலந்து என்றும் வாழ்பவர். இது நம் அறிவுக்கு நன்றாகத் தெரிகிறது.

ஆயினும் அவரது புனித உடலை நாம் நெருக்கத்தில் கண்டு மகிழ்ந்தோம் ; அவரது பாவனக் குரலை அணுக்கத்தில் கேட்டுக் குளிர்ந்தோம்; அவரது பவித்திரமான எழுத்தை வாராவாரம் படித்துச் சிலிர்த்தோம். எனவே இன்று அந்த உடல் உடைந்துவிட்டது, குரல் ஒடுங்கி விட்டது, எழுதிய கை ஓய்ந்துவிட்டது என்னும்போது தத்து வார்த்தங்கள் இந்தப் பேதை நெஞ்சுக்குக் கைகொடுக்கவில்லை! அவலமாக, அநாதரவாக நின்று கண் கலங்குகிறோம்.

'எத்துணை எதிர்ப்பிலும் அசைந்து கொடுக்காமல், தொண்டு கிழப் பருவத்திலும் பௌருஷ பர்வதமாக வாழ்ந்த ராஜாஜி ! எங்களுக்கு ஆண்மை அருளுங்கள். ஆன்ம சக்தி அருளுங்கள். உண்மை அருளுங்கள்; உழைப்பை அருளுங்கள். ஓரிடத்தில், ஓர் உருவில், ஒரு காலத்தில் வாழ்ந்த தாங்கள் இன்று எங்குமாய் யாவுமாய் எப்போதுமாய் உள்ள பரம்பொருளில் கரைந்து அமர வாழ்வு வாழ்கிறீர்கள் என்பதை நாங்கள் எங்கள் உள்ளத்துக்குள் தெற்றென உணர்ந்து தெளிவு பெறுவதற்கு ஆசி கூறுங்கள்! எங்களை நம்பித் தாங்கள் விட்டுச் சென்றுள்ள சத்திய — தர்ம — சுதந்திரப் பெரும் பணிக்குக் குன்றாத புத்துணர்வுடன் எங்களை அர்ப்பணித்துக் கொள்ள எழுச்சி அருளுங்கள் எந்தையே !'

**எற்றைக்கும் ஏழேழ் பிறவிக்கும் உன்றன்னோடு**
**உற்றோமே யாவோம், உனக்கே நாம்**
**ஆட்செய்வோம்!**

# ஆற்றின் மோகம்

"ஐயோ! என் முடிவு நெருங்கிவிட்டது!" என்று ஒரு பாட்டியைப் போல் ஓர் ஆறு துக்கம் அடைந்து அழுதது. பெரிய ஆறு.

"எவ்வளவு ஆனந்தமாக வளர்ந்தேன். மலையிலிருந்து இறங்கி ஓடியும் துள்ளியும் நூற்றுக்கணக்கான மைல்களாக நீண்டு வளர்ந்தேன். இப்போது முடியும் காலம் வந்துவிட்டதே" என்று கண்ணீர் விட்டது. ஆற்றுக்குக் கண்ணீர் எதேஷ்டமல்லவா? கடற்கரையண்டை இப்படி அழுதது. கடலில் விழ்ந்தால் தன் வாழ்க்கை முடிந்தது என்று எண்ணிற்று.

* * *

இந்த நிமிஷம் இருந்த ஆறு அடுத்த நிமிஷத்தில் இல்லை. மூழ்கிக் குளிக்கிறோம். நாம் ஜலத்தில் இறங்கிய போது இருந்த ஜலம் அடுத்த நிமிஷத்தில் இல்லை. புது ஜலம் வருகிறது. மறுபடியும் வேறு ஜலம். இப்படியே இந்தக் கணமிருந்த நீர் அடுத்த கணத்தில் இல்லை. ஆயினும் அதை ஒரு நிலை பொருளைப் போல் கருதி அதற்குப் பெயரும் கொடுக்கிறோம். மேலே ஆகாயத்திலிருந்து விழும் மழைத் துளிகளைப் போலவே ஆறும். மழைக்கு நாம் பெயர் வைக்கிறதில்லை. அது விழுந்து மறைவது நமக்கு நன்றாகத் தெரிகிறது. ஆறும் அவ்விதமே. இந்தக் கணம் இங்கே இருந்த நீர்த் துளிகள் அடுத்த கணம் இங்கே இல்லை. ஆனால் ஆற்றங்கரையும் மணலும் மரமும் பார்த்து ஆறும் ஒரு நிலையான பொருள் என்று கருதுகிறோம். கடற்கரையண்டை வந்து சேர்ந்த ஆறும் அப்படியே எண்ணிற்று. "ஐயோ! இனி என் உயிர் முடிந்தது" என்று துக்கப்பட்டது.

* * *

நம்முடைய வாழ்க்கையும் உடலும் ஆறுகளைப் போலவே. நேற்று இருந்தது இன்று இல்லை. இன்று இருந்தது நாளை இல்லை. ஆயினும் நிலையான பொருளாக நம் உடலைக் கருதி வருகிறோம். இது பெரிய விஷயம். அழுது கொண்டிருந்த ஆற்றைக் கவனிப்போம்.

ஆறு கடலில் விழுந்துவிட்டது. அதன் தனி உயிர் முடிந்து போயிற்று. கடலில் நீருடன் நீராகக் கலந்துவிட்டது. நீர்த் துளிகள் நாசமாகவில்லை. மாயம்தான் தீர்ந்தது. நான் ஒரு தனிப் பொருள். என்று ஓடும் ஆறு எண்ணியது. ஒரு மோகம். அகம்பாவம்.

ஓடி வரும் ஒவ்வொரு துளியும் கடலில் விழுந்து நீருடன் நீராகக் கலந்து போகிறது. சாகவில்லை. ஆற்றின் உருவம்தான் மறைந்தது. நீர் நீருடன் கலந்துவிட்டது. தான் எங்கிருந்து முதலில் வந்ததோ அங்கே மறுபடியும் போய்ச் சேர்ந்துவிட்டது. மறுபடி பகவான் சூரியனுடைய அன்புக் கைகள் — பல்லாயிரம் கைகள்—அகன்று அணைத்து, நீரை மேலே தூக்கிச் சென்று அங்கிருந்து அதன் வயிறு பெருத்ததும் போ என்று கீழே மறுபடியும் அனுப்புவான்.

"ஆறே! அழ வேண்டாம்!" என்று சொல்லி நாமும் அறிவு அடைவோமாக. யமனைக் கண்டு பயப்பட வேண்டியதில்லை. துக்கப்பட வேண்டியதில்லை. அண்டம் முழுதும் பரவி நிற்கும் பெருங்கடலாகும் கடவுள். அதனுள் போய்ச் சேருவதற்கு ஏன் பயப்பட வேண்டும்? ஏன் துக்கப்பட வேண்டும்?

சக்கரவர்த்தி ராஜகோபாலாச்சாரியார்



# பிரதமர் வருகிறார்; வரவேற்கிறோம்!

மதுரை| சின்னாளப்பட்டி அருகே உள்ள காந்தி கிராமத்தின் வெள்ளி விழாவில் பங்குபெறப் பிரதமர் வருகிறார். திரு ராமச்சந்திரனும், டி.வி.எஸ். குடும்பத்தில் பிறந்த ஸ்ரீமதி சௌந்தரம் ராமச்சந்திரனும் நடத்திவரும் இந்தக் காந்திய ஆதர்ச நிறுவனத்தின் வெள்ளி விழா ஜனவரி 1ந் தேதி முதல் 5ந் தேதி வரை கொண்டாடப்படும்போது நிறைவு நாளில் தான் பாரதப் பிரதமர் இந்திரா காந்தி அவர்கள் வந்து கலந்து கொண்டு பட்டமளிப்பு விழாப் பேருரை நிகழ்த்துகிறார். சுமார் 500 சாந்தி சேனை ஊழியர்கள் அணிவகுத்துப் பிரதமரை வரவேற்று அழைத்துச் செல்வார்கள் என்றும் கான்அப்துல் கபார்கானால் அடிக்கல் நாட்டப்பட்ட பாரத சுதந்திர ஸ்தூபியைப் பிரதமர் திறந்து வைப்பார் என்றும் அறுநூறுக்கு மேற்பட்ட பெண்கள் அம்பர் சர்க்கா நூற்பதைப் பிரதமர் பார்வையிடுவார் என்றும் 5—1—73 இரவு பிரதமர் இந்திரா காந்தி கிராம ஊழியர்களுடன் அமர்ந்து சமபந்தி போஜனம் செய்வார் என்றும் காந்தி கிராம டைரக்டர் திரு ஜி. ராமச்சந்திரன் அறிவித்திருக்கிறார். தமிழ் நாட்டின் இணையற்ற காந்தியக் கேந்திரம் வெள்ளி விழாக் கொண்டாடும் வேளையில் நாமும் மனமார வாழ்த்துகிறோம்.



# முன்னாள் ஜனாதிபதி ட்ரூமன்

முன்னாள் அமெரிக்க ஜனாதிபதி ஹாரி ட்ரூமனின் மறைவு இந்திய மக்களை வருத்தம் கொள்ளச் செய்துள்ளது. மிகச் சாதாரணமான குடும்பத்தில் பிறந்த ட்ரூமன் படிப்படியாகப் பதவிகளில் உயர்ந்து அமெரிக்க ஜனாதிபதியானார். இரண்டாம் உலக யுத்தத்தை விரைவில் முடிக்க அணுகுண்டு ஆயுதத்தை ஜப்பான் மீது பிரயோகம் செய்ய இவர் நிர்மானித்தது பற்றிக் கருத்துவேற்றுமைகள் இருந்தாலும் கடுமையான யுத்தம் விரைவில் முடிந்ததே என்ற திருப்தியும் அப்போது ஏற்படாமல் இல்லை. நமக்கு மிகவும் தேவையான சமயத்தில் உணவுப் பொருள்களைப் பெருமளவில் கிடைக்கச் செய்தார். பிற்காலத்தில் பி.எல். 480 உதவி என்று பிரபலமடைந்தது இது.



யுத்தத்தில் சேதமடைந்த ஐரோப்பிய நாடுகளின் புனர் வாழ்வுக்காக மார்ஷல் திட்டத்தை உருவாக்கியவரும் ஜனாதிபதி ட்ரூமன்தான். கம்யூனிஸ விஸ்தரிப்பைத் தடுக்கக் கொரியாவில் போலீஸ் நடவடிக்கை என்ற பெயரில் ஐ.நா. சார்பில் போரிட்டார். தமது ஆணையை ஏற்க மறுத்த தளபதி மக் ஆர்தரைத் தைரியமாக வேலை நீக்கம் செய்தார்.

''ட்ரூமன் கொள்கை'' என்றே பிரபலமடைந்து விட்ட அயல் நாட்டுக்குப் பொருளாதார ஒத்துழைப்புக் கொள்கை அவருக்கு நிலையான புகழைத் தேடித் தந்துள்ளது. எல்லாவற்றுக்கும் மேலாகப் பின்தங்கிய நாடுகள் நலனுக்காக வகுக்கப்பட்ட அவருடைய பொருளாதாரக் கொள்கை பளிச்சிடுகிறது. ஒரு நல்ல ராஜதந்திரியை இழந்து விட்ட அமெரிக்க மக்களுக்கு இந்தியா தனது அநுதாபத்தைத் தெரிவித்துக் கொள்கிறது.




" ஏழ்மையை ஒழிக்கும் வேகத்தை அதிகரிக்க வேண்டும்."
-பிதான்நகர் காங்கிரஸ் மகாநாட்டில் பிரதமரின் பேச்சு




டைரக்டர் கே. பாலசந்தர் எழுதும் 'மூன்று முடிச்சுக்கள்' பற்றிய அறிவிப்பை 51ம் பக்கத்தில் காணலாம்.

# தமிழ் நாட்டிலே...

தீரன்

## சத்திய சகாப்தம் முடிந்தது

சாந்திய யுகத்தின் கடைசி மகான் — அரசியல் மேதை, ராஜதந்திரி, இலக்கிய ஞானி ராஜாஜி அமரராகிவிட்டார். பி. சி. ஜி. முதல் அணுகுண்டு வரை எந்தப் பிரச்னையானாலும் எவருக்கும் அஞ்சாமல் நாட்டு மக்களுக்கு நன்மை தரக் கூடிய தம் கருத்தை உடனே சொல்லும் உறுதியாளர் மறைந்துவிட்டார்.

'புரந்தார் கண்ணீர் மல்கச் சாகிற்பின்
சாக்காடும்
இரந்து கோட்டக்க துடைத்து'

என்று திருவள்ளுவர் கூறியிருப்பது போல் திருவல்லிக்கேணி கிருஷ்ணாம்பேட்டை மயானம் அவர் உடலை அடையும் பாக்கியத்தைப் பெற்றுப் புண்ணிய பூமியாகி விட்டது. தீமைகளையும், மக்கள் விரோதப் போக்கையும் மேற்கொள்பவர்கள் எப்போதும் யாருடைய நாவை எண்ணிப் பயப்படுவார்களோ, அந்த நா இனி மேல் பேசாது. அந்தக் கை இனிமேல் எழுதாது. அவர் இருக்கிறார் என்பதே தீமை செய்பவர்களுக்கு ஓர் எச்சரிக்கையாக இருந்தது. அந்த அபாய அறிவிப்பு மறைந்துவிட்டது.

உறங்கும் ஆயினும் மன்னவன்தன் ஒளி
கறங்கு தெண்திரை வையகம் காக்குமால்

என்று சீவக சிந்தாமணியில் வரும் வாக்கியத்துக்கு ஒரே உதாரணமாய் இருந்தார் அவர். அவருடைய ஒளி உலகைத் தீமைகளிலிருந்து காத்தது. அவர் எங்கோ ஒரு மூலையில் ஆடம்பரமின்றி இரண்டாவது மகாத்மா காந்தியாக வாழ்ந்து கொண்டிருந்ததே இந்த நாட்டின் அரசியல் ஒழுக்கத்துக்கும் நேர்மை நாணயங்களுக்கும் வழி காட்டுவதாயிருந்தது. இனி அந்த வழிகாட்டும் ஒளி இல்லை. தமிழக மக்களின் — இந்திய மக்களின் — உலக மக்களின் — துயரத்தையும் வேதனையையும் சரியாகச் சொல்ல முடியுமானால் திரு பிலுமோடி கூறியுள்ள, ''மகாத்மா காந்தி இரண்டாவது முறையாக மறைந்துவிட்டார்'' என்ற வாக்கியம்தான் பொருத்தமாக இருக்கும்.

## உயரிய மரியாதை

அமரர் ராஜாஜியின் விருப்பத்துக்கு எதிராக மதுவிலக்குக் கொள்கையை இங்கே ரத்துச் செய்து ஏழை எளியவர்களின் வயிற்றெரிச்சலைக் கொட்டிக் கொண்ட தி.மு.க. அரசு, 'ராஜாஜியின் இறுதி யாத்திரை தினமான 26—12—72 அன்று மட்டும் அவருக்கு மரியாதை செலுத்துமுகமாகத் தமிழ் நாட்டிலுள்ள கள் சாராயக் கடைகள் மூடப்பட்டிருக்கும்' என்று அறிவித்தது. மறைந்த மாமேதை ராஜாஜிக்கு மரியாதை செலுத்துவதற்காக இதைச் செய்ததாகத் தி. மு. க. அரசு சொல்லிக் கொள்கிறது. தி.மு.க. அரசு மதுவிலக்குக் கொள்கையை ரத்துச் செய்த போது அரசியல் மாமேதை ராஜாஜி அடைந்த துக்கமும் அதிர்ச்சியும் எல்லையற்றது. மதுவிலக்கு ரத்து ஆகாமல் இருந்திருந்தால் ராஜாஜி இவ்வளவு மனத் தளர்ச்சி அடைந்திருக்க மாட்டார். நம்மிடையே இன்னும் சில ஆண்டுகள்கூட இருந்திருப்பார். எனவே தி.மு.க. அரசுக்கு உண்மையிலேயே ராஜாஜி மேல் மரியாதையும் நன்றியும் விசுவாசமும் இருக்குமானால் — அது அவருக்குச் செய்யும் நிரந்தரமான உயரிய மரியாதை உடனே மீண்டும் மதுவிலக்கை நிரந்தரமாக அமுல் செய்வதுதான்.

## சில உருக்கமான காட்சிகள்:

மூதறிஞர், மகாத்மா காந்தியின் மனச்சாட்சிக் காவலர், ராஜாஜி அவர்களின் புனித உடல் பொதுமக்களின் தரிசனத்துக்காக ராஜாஜி ஹாலில் வைக்கப்பட்டிருந்தபோது அங்கே வரிசையிலும், முன்புறமும் நின்றிருந்த பல லட்சம் மக்கள் காணும்படி சில உருக்கமான சம்பவங்கள் நிகழ்ந்தன.

ராஜாஜி காந்திஜி இருவருக்கும் பேத்தியாக இருக்கும் பேறு பெற்ற ஸ்ரீமதி தாரா, பாட்டனாரின் இறுதி ஊர்வல சமயத்தில் ரோமிலிருந்து வந்து சேர்ந்தது ஒரு சோக அதிசயம் எனலாம். கடந்த ஒரு மாதமாக அவளுக்கு இந்தியாவிலிருந்து எந்தத் தகவலும் இல்லை. கடிதங்கள்கூட ஏனோ போய்ச் சேரவில்லையாம். ஆனாலும் திடுமென அவளை ஏதோ ஓர் உள்ளுணர்வு 'இந்தியாவுக்குப்போ' என்று பிடரியைப் பிடித்துத் தள்ளியதாம். தாத்தாவுக்கு ஏதோ நேரப் போகிறது என்ற அளவுக்கு அவளுக்குப் புரிந்துவிட்டது. கணவரிடம் விடைபெற்று, எப்பாடுபட்டோ விமானம் பிடித்து ஐயாயிரம் மைல்கள் பறந்து வந்து பம்பாய் அடைந்தாள். ராஜாஜித் தாத்தா வைகுந்தம் அடைந்துவிட்ட செய்தி கிடைத்தது. ஸ்ரீமதி தாரா கண்ணீரும் கம்பலையுமாக ராஜாஜி மண்டபத்தில் நுழைந்த போது உருகாத நெஞ்சமில்லை.

★

போலியோ நோயால் நடப்பதற்குச் சக்தியற்றுப் போயிருந்த திரு லாசரஸ் மூன்று சக்கரச் சைக்கிளில் வந்து ராஜாஜி மண்டபத்தின் உயரமான இருபத்தெட்டு படிக்கட்டுகளிலும் கண்ணீர் உகுத்தபடி ஒவ்வொரு படியாக ஊர்ந்து கடந்து சிரமப்பட்டு மேல்தளத்துக்கு ஏறிச் சென்று ராஜாஜியின் புனித உடலுக்கு அஞ்சலி செலுத்திவிட்டு மீண்டும் ஊர்ந்து படியிறங்கி வந்தார்.

''ஐந்து வயதிலேயே போலியோ நோயால் என் கால்கள் நடக்கும் சக்தியை இழந்துவிட்டன. என்றாலும் எழும்பூர் கலைக் கல்லூரியில் படித்தேன். படித்து முடித்த எனக்கு எங்குமே வேலை கிடைக்கவில்லை. 1950ம் ஆண்டு நான் ராஜாஜியை அணுகி என் நிலையைக் கூறியபோது அவர் மனம் நெகிழ்ந்து 'டிராப்ட்ஸ்மேன்' வேலை கிடைக்கச் செய்தார். இப்போது நான் சேப்பாக்கம் ஆபீஸில் 'சீனியர் டிராப்ட்ஸ்மேனாக' இருக்கிறேன்.

நான் மூன்று சக்கர வண்டி வாங்க எனக்கு உதவும்படியும் ஹரிஜன நிதி ராதாகிருஷ்ணனுக்கு ராஜாஜிதான் சிபாரிசுக் கடிதம் கொடுத்தார். ராஜாஜியின் சிபாரிசுக் கடிதத்தால்தான் எனக்கு ஐந்நூறு ரூபாய் ஹரிஜன நிதியிடமிருந்து வந்தது. அப்படி எல்லாம் என் போன்ற ஏழைக்கு வாழ்வளித்த தெய்வம் இன்று மறைந்து விட்டதே '' என்று கதறிக் கண்ணீர் உகுத்தார் திரு வாசரஸ்.

★

'' 1952ல் ரேஷனைத் துணிந்து நீக்கிச் சாதாரண மக்களின் துயரைப் போக்கிய மகான் மறைந்து விட்டாரே '' என்று தரிசனத்துக்காக ராஜாஜி ஹால் முன் வரிசையில் நின்று கொண்டிருந்த மூதாட்டி ஒருவர் கண் கலங்கினார்.

★

''மதுவிலக்கைக் கொண்டு வந்து எங்களைப் போன்ற ஹரிஜனங்களின் வீட்டில் எல்லாம் விளக்கேற்றிய பெரியவர் போய்விட்டாரே '' என்று நடுத்தர வயது ஹரிஜன மாது ஒருவர் கதறி அழுதார்.

★

டிசம்பர் 26ந் தேதி ராஜாஜியின் புனித உடலருகே திருவடிகளைப் பற்றி அழுதுகொண்டிருந்த கே. ஏ. ரங்கிலான் என்னும் அறுபத்தொரு வயது ஹரிஜனக் கிழவர் தம் கையில் இருந்த வெள்ளிப் பூண் பதித்த கைத்தடியைக் காண்பித்து, ''எல்லாம் என் குருநாதர், ராஜாஜியின் கருணை ! இந்த ஊன்றுகோல் எனக்கு ராஜாஜி தந்த பரிசு. 'கன்னியப்பன் நகர்' கிராமத்தாராக என்னை நியமித்த போது ராஜாஜி அவர்கள் எனக்குக் கொடுத்த ஊன்றுகோல் இது'' என்று நாக்குழற அழுதபடி கூறிவிட்டு, ராஜாஜி சடலத்துக்கு மாலை சூட்டினார். ''இத்தகைய நல்லவரை இனி எப்போது எங்கே பார்க்கப் போகிறோம்?'' என்றார் அவர்.

★

கியூ வரிசையில் வந்து ராஜாஜியின் புனித உடலைப் பார்த்துத் தயங்கித் தயங்கிக் கண்களில் நீர் மல்க நின்ற வயதான மூதாட்டி ஒருத்தியைப் போலீஸார் அங்கிருந்துவிரைந்து நகருமாறு விரட்டியபோது, '' ஐயா! கண் பார்வை மங்கிப் போச்சு. தயவுசெய்து கொஞ்சம் பக்கத்திலே கொண்டு போய்க் காண்பிச்சாப் புண்ணியமாப் போகும் '' என்று அந்த மூதாட்டி கூறவே சடலத்தின் அருகே இருந்த ஊழியர் ஒருவர் அந்த மூதாட்டியை ராஜாஜி சடலத்தின் அருகில் அழைத்துச் சென்று காண்பித்து அவர் திருப்தியாகப் பார்த்தபின்பே அனுப்பி வைத்தார்.

## ராஜாஜியின் ஆசை

தமிழ்நாட்டில் லஞ்ச ஊழலும், அதிகார துஷ்பிரயோகமும், கட்சி நபர்களின் குறுக்கீடும் இல்லாத நல்ல ஆட்சி வரவேண்டும் என்று ராஜாஜி படுத்த படுக்கையாவதற்குச் சில நாட்களுக்கு முன்புவரை ஆசைப்பட்டார்; எழுதினார். 'அப்படி ஒரு நல்லாட்சியைக் கொண்டு வரப்போகிற முயற்சியில் இறங்கியுள்ளேன்' என்று தேடி வந்தவர்களுக்கெல்லாம் ஆசி வழங்கினார். மதுவிலக்கை ரத்துச் செய்தது, தமிழக அரசு லாட்டரி நடத்துவது ஆகியவையும், லஞ்ச ஊழல்களும் அவரால் வெறுக்கப்பட்டன. 'லஞ்ச ஊழல் நிறைந்த அரசு பதவியில் தொடரக் கூடாது. சிறிது காலத்துக்கு ஜனாதிபதி ஆட்சி நடைபெற்ற பின்தான் தமிழ்நாட்டில் சகஜமாகவும் அமைதியாகவும் தேர்தல் நடத்த முடியும்' என்றுகூட அவர் கருதினார். திரு காமராஜரின் 70வது பிறந்த தினத்தில், ''தமிழ் நாட்டு மக்களின் அன்புக்கும் அபிமானத்துக்கும் பெருமளவில் பாத்திரமாகியுள்ள தலைவர் காமராஜின் எழுபதாவது பிறந்த தினத்தில் அவருக்கு எனது அன்பும் ஆசீர்வாதமும்'' என்று வாழ்த்தினார். எனவே தமிழ்ப்பெருமக்கள் இனி ராஜாஜி அவர்களுக்குச் செய்ய வேண்டிய மகத்தான அஞ்சலி என்பது லஞ்ச ஊழலையும் அதை வளர்ப்பவர்களையும் எதிர்த்துப் போராடி நல்லாட்சி அமைப்பதுதான். அந்தப் புனித முயற்சியால்தான் ராஜாஜி அவர்களின் ஆன்மா சாந்தியடையும்.

---

# எப்பொழுது காண்போம் இனி!



இன்ப இலக்கிய ஈடில்லா நற்பணியும்
மன்புவி ஓங்க மலர்பணியும் — நன்புமிகு
நாவலன் ராஜாஜி நாடுகின்ற நாட்டம்போல்
யாவர் புரிவார் இனி

ஆசிகள் கூறி அணைத்தவனை புத்துணர்வை
நேசமெழ நித்தம் நிறைப்பவனை — கூசாமல்
சிங்கம்போல் கர்ஜிக்கும் சீமான்ரா ஜாஜியை
எங்குநான் காண்பேன் இனி

தீண்டாமை போயொழிய தியமது மாண்டழிய
பூண்ட கதரியக்கம் பொங்கியெழ—ஆண்டதொண்டன்
பேரான பாரத ரத்னரா ஜாஜிபோல்
சீராய்வார் யாரினி செப்பு

காந்தியின் உள்ளம் கவர்ந்தவனை வன்சிறையில்
நீந்தி புகழ்வளர்த்த நேசனை — சாந்துணையும்
நல்லுரைகள் நட்டஎம் நண்பன்ரா ஜாஜிபோல்
சொல்லவல் லார்உண்டோ சொல்.

— வித்துவான் சு. உமைதாணு பிள்ளை



# அன்பும் துன்பமும்


ஜகத்குரு ஸ்ரீ காஞ்சி
காமகோடி சங்கராசாரிய சுவாமிகள்


மனிதப் பிறவி எடுத்ததன் பயனே அன்பு செலுத்துவதுதான். அன்பு செலுத்துவதில் உள்ள ஆனந்தம் வேறு எதிலும் இல்லை. தனக்கென்று பொருள் சேர்ப்பதில், புகழ் சேர்ப்பதில், அலங்காரம் செய்துகொள்வதில் தாற்காலிகமாக இன்பம் கிட்டலாம். ஆனாலும் இவற்றில் உள்ளம் நிறைவு பெறுவதில்லை. உள்ள நிறைவான ஆனந்தம் அன்பு செலுத்துவதிலேயே உண்டாகிறது. அன்பு செலுத்தும்போது நமக்கு எத்தனை கஷ்டம் வந்தாலும், தேக சிரமம் வந்தாலும், பணச் செலவானாலும் இதெல்லாம் தெரிவதேயில்லை. அன்பின் ஆனந்தமும் நிறைவுமே இந்தத் துன்பத்துக்கெல்லாம் மேலாகத் தெரிகிறது. அன்பு செலுத்தாத வாழ்க்கை வியர்த்தமே.

அன்பு செலுத்தும்போது துன்பமே தெரிவதில்லை என்றேன். ஆனால் கடைசியில் ஒரு நாள் அன்பு செலுத்தப்பட்ட வஸ்துவே நமக்குப் பெரிய துன்பத்தைக் கொடுத்துவிடுகிறது. நாம் ஒருவரிடம் அன்பு வைக்கிறோம். கடைசியில் ஒரு நாள் அவர் நம்மை விட்டுப் போயே போய்விடுகிறார். அல்லது நாமாவது அவரை விட்டு ஒரு நாள் போகத்தான் போகிறோம். அப்போது 'ஐயோ, நம்மிடமிருந்து போய்விட்டாரே' என்றோ, அல்லது 'ஐயோ, நாம் இவரை விட்டுப் போகிறோமே' என்றோ பெரிய துக்கம் உண்டாகிறது. இத்தனை காலமாக அன்பு தந்த ஆனந்தமும் நிறைவும் கடைசியில் பொய்யாகி இந்தத் துன்பத்தில்தானே முடிந்தது என்று மனசு கலங்குகிறோம். அன்பின் முடிவான பலன் துன்பம்தானா என்று சலிப்பு உண்டாகி விடுகிறது. எத்தனைக்கெத்தனை அன்பு வைத்தோமோ, அத்தனைக்கத்தனை துன்பம் பிரிவின்போது உண்டாவதைப் பார்க்கிறோம். அன்பே செலுத்தாமல் சுயகாரியவாதியாகவோ, அல்லது ஜடமாகவோ இருக்கிற ஜன்மாவே லோக்கியமானதோ என்றுகூடத் தோன்றிவிடும்.

ஆனால் உண்மையில் சுயகாரியவாதி பாபத்தைத்தான் மூட்டை கட்டுகிறான். மனிதப் பிறவி எடுத்துவிட்டு, ஆனந்தம், நிறைவு முதலியன இல்லாமல் மரம், மட்டை, கல் மாதிரி ஜடமாக இருப்பதும் பிரயோஜனம் இல்லை.

அன்பு செய்தாலும் முடிவில் துன்பம்; அன்பு இல்லாமல் இருந்தாலோ வாழ்க்கையிலேயே ருசி இல்லை. இப்படியானால் என்ன செய்வது? மாறாத, மாளாத அன்பை உண்டாக்கிக் கொள்வதே வழி. நம்முடைய அன்புக்குரிய வஸ்து நம்மை விட்டு என்றும் பிரிந்து போகாததாக இருக்க வேண்டும். அப்படி ஒரு வஸ்து இருந்து அதனிடம் அன்பை வைத்து விட்டால் எப்போதும் ஆனந்தமாக நிறைவாக இருக்கலாம். அதாவது என்றும் மாறாமல் இருக்கிற ஒரே வஸ்துவான பரமாத்மாவிடம் அன்பைப் பூரணமாக வைத்துவிட வேண்டும். பரமாத்மா நம்மை விட்டு ஒருபோதும் நீங்குவதில்லை. நம் சரீரத்திலிருந்து உயிர் பிரிந்தாலும், பிரிகிற உயிர் பரமாத்மாவிடமிருந்து பிரியாமல் அவரிடமே கலந்துவிடும்.

அழியாத பரமாத்மாவிடம் அன்பாக இருக்க வேண்டும் என்றால் வேறு யாரிடமும் அன்பாக இருக்கக் கூடாதா, மற்ற எல்லோரும் என்றோ ஒரு நாள் நசிப்பவர்கள்தானே என்று கேள்வி எழலாம். பரமாத்மாவிடம் அன்பை நாம் மேலும் மேலும் வளர்த்துக் கொண்டால் அவருக்கு வேறாக யாருமே இல்லை என்று தெரியும். அதுவரை மரணமடைகிற மனிதர்களாக எண்ணி யாரிடமெல்லாம் துக்க ஹேதுவான அன்பை வைத்திருந்தோமோ அவர்களும்கூட இப்போது அழியாத பரமாத்ம ஸ்வரூபமாகவே தெரிவார்கள். இப்படி உலகம் முழுவதையும் பரமாத்மாவாகவே பார்த்து அன்பு செலுத்த வேண்டும்.

எல்லோரையும் பரமாத்ம ஸ்வரூபமாகப் பார்த்து அன்பு செலுத்த முடியாவிட்டாலும் ஆத்ம குணம் நிறைந்த பெரியவர்கள், நல்ல ஞானமும் அருளும் நிறைந்த ஸத்குரு ஆகியோரைப் பரமாத்மாவாகக் கருதி அன்பு செலுத்துவது சுலபமாக இருக்கிறது. அப்படிப்பட்டவர்களிடம் அன்பு வைத்து ஆத்மார்ப்பணம் செய்துவிட்டால் போதும். அவர்கள் மூலமாகப் பரமாத்மா நமக்கு அநுக்கிரகம் பண்ணிவிடுவார். நம் அன்புக்குப் பாத்திரமானவர் மரணமடைந்தாலும் கூட பரமாத்மா வேஷமாகப் போட்டுக் கொண்ட ஒரு சரீரத்துக்குத்தான் அழிவு உண்டாயிற்று. இப்போது சரீரி பரமாத்மாவோடு ஒன்றாகிவிட்டார் என்ற ஞானத்தோடு பிரிவுத் துன்பத்துக்கு ஆளாகாமல் இருப்போம்.







# திருவடி சேர்ந்த செல்வர்

ராஜாஜி சென்ற திங்கட்கிழமை (25-12-72) மாலை 5-44க்குச் சென்னை அரசாங்க மருத்துவ மனையில் நாராயணன் திருவடி சேர்ந்து, திருநாட்டை அலங்கரிக்கச் சென்றார். அவரது பூதவுடலை மருத்துவ மனையிலிருந்து ராஜாஜி மண்டபத்துக்கு ராணுவத்தினர் கொண்டு வந்தனர்.

1. ராஜாஜி மண்டபப் படிகளில் நின்று தமிழக முதல்வரும் அமைச்சர்களும் மரியாதை செலுத்துகின்றனர்.

2. ஸ்ரீமதி லட்சுமி தேவதாஸ் காந்தி, ஸ்ரீ கோபாலகிருஷ்ண காந்தி, ஸ்ரீமதி எம். எஸ். சுப்புலக்ஷ்மி முதலியோர் தாங்கொணாத் துயருடன் வருகின்றனர்.

3. ராஷ்டிரபதி வி. வி. கிரி மலர்வளையம் வைத்து வணங்குகிறார். பாரதப் பிரதமர் சார்பிலும் ஒரு மலர் வளையம் வைத்தார்.

4. தமிழக ஆளுநர் திரு கே. கே. ஷா அஞ்சலி செலுத்துகிறார்.

5. முதலமைச்சர் திரு மு. கருணாநிதி மலர் வளையம் வைக்கிறார். பின்னால் அமைச்சர் திரு அன்பில் தர்மலிங்கமும், அமைச்சர் திரு ப. உ. சண்முகமும் நிற்கின்றனர்.

6. ராஜாஜியின் இரு புதல்வியர் ஸ்ரீமதி நாமகிரி, ஸ்ரீமதி லக்ஷ்மி தேவதாஸ் காந்தி ஆகியோர் சோகமே உருவமாய் அமர்ந்திருக்கின்றனர்.















7. துயரை விவரிக்க வார்த்தைகள் ஏது? ஸ்ரீ டி. டி. கே. — சதாசிவம் தம்பதி.

8. ராணுவ மரியாதை.

9. டாக்டர் நரண்டேயும், திரு ஜி. கே. சுந்தரமும் மலர் மாலை அணிவிக்கின்றனர்.

10. திரு காமராஜ் மலர் வளையம் வைக்கிறார்.

11. அ. தி. மு. க. தலைவர் திரு எம். ஜி. ஆர். மரியாதை செலுத்துகிறார்.

12. ராஜாஜி மண்டப முகப்பிலிருந்து மக்களின் 'க்யூ' மைல்கணக்கில் நீண்டது. இரவு இரண்டு மணி வரை நீடித்தது. மறு நாள் அதிகாலையிலிருந்தே அலை அலையாக மக்கள் வெள்ளம்.

13. பிரதம நீதிபதி வீராசாமியும் நீதிபதி கைலாசமும்.













14. நடிகர் திலகம் சிவாஜி கணேசன் அஞ்சலி செய்கிறார்.

15. உறவினரும் உற்ற நண்பர்களும்.

16. முப்படையினர் ராஜாஜியின் புனித உடலைப் பெருமையோடும் துயரோடும் ராணுவ வாகனத்துக்கு எடுத்துச் செல்கின்றனர்.

17. லட்சோப லட்சம் மக்கள் தெரு வெல்லாம் வெள்ளமென நிறைந்தனர். கட்டடங்களின் மாடிகளிலும் கம்பங்கள், மரங்களின் மீதும் ஏறி நின்றனர்.





18. அக்னி தேவனின் அரவணைப்பு

19. மயானத்தில் ராஷ்டிரபதி வி.வி.கிரி, ஆளுநர் கே. கே. ஷா, பிரதம செயலாளர் திரு சபாநாயகம் இறுதி மரியாதை செலுத்துகின்றனர்.

20. மறு நாள் ராஜாஜியின் புதல்வர் திரு வி. ஆர். நரசிம்மன், சென்னைக் கடற்கரையில் காந்தி சிலைக்கு நேராக அலைகளில் அஸ்தி கரைக்கிறார்.

21. அவ்வமயம் ஸ்ரீமதி எம். எஸ்ஸின் குரலில் எழுந்த 'வைஷ்ணவ ஜனதோ' பாடல் சூழ்நிலையைப் புனிதப் படுத்தியது.



# மலைவாயில் விழுந்த  மகாஜோதி

டிசம்பர் 8ந் தேதி. ராஜாஜியின் ஜயந்தித் திருநாள். தொண்ணூற்று நாலாண்டுத் தொண்டுக்காக நெஞ்சார்ந்த நன்றிபூண்ட மக்கள் 'நூறாண்டு வாழ்ந்துவிடுவார்' என்ற நம்பிக்கையுடன் மகானை வணங்கி மலர் மாலைகள் சூட்டி ஆசி பெறுவதற்காக நௌரோஜி சாலையில் உள்ள அவரது இல்லத்துக்கு வந்தபடி இருக்கிறார்கள்.

இல்லத்தில் திருநாளின் களிப்பைக் காணோம். வந்தனம் செய்ய வந்தவர்கள் வெளியிலேயே நிறுத்தப்படுகிறார்கள். உள்ளே நடக்கும் 'கசமுச'ப் பேச்சு வார்த்தைகள் இனம் தெரியாச் சோகத்தைப் பரப்புகிறது.

ராஜாஜிக்கு உடல் நலம் சரியில்லையாம். ஒருசில தினங்களாகவே வயிற்று வலியில் துடிக்கிறாராம். இன்று தம்மை வணங்க வந்தவர்களைக் காணமாட்டாத அளவுக்குக் களைத்துக் கிடக்கிறார்!

ஒளியோடு வந்த முகங்கள் இருளோடித் திரும்புகின்றன. ஞான சூரியன் மேற்கு மலை நோக்கிச் சாயத் தொடங்கிவிட்டதா? உலகை இருள் சூழப் போகிறதா? பிறந்த தினத்தன்று மகாபுருஷர் பல்லாண்டு வாழ இறைவனிடம் பிரார்த்திப்பது இன்று வெறும் சம்பிரதாயமாக இருக்கவில்லை. உள் மனம் கரைந்து இறைவனுக்குப் பிரார்த்தனை செலுத்தியவாறு அன்பர்கள் திரும்புகின்றனர்.

உள்ளே குளியலறைக்குச் சென்ற ராஜாஜி அங்கேயே படுத்து விடுகிறார். அவரது படுக்கையறையிலேயே சரீரத்துக்கான இயற்கை அழைப்புக்களை ஏற்கலாம். அதற்காகச் சுசுருஷை செய்ய அடியார் காத்திருக்கின்றனர். ஆனாலும் மகான் பிடிவாதமாகக் குளியலறைக்குச் சென்றார். அங்கேயே சாய்ந்துவிட்டார். அப்போதும் அந்த வஜ்ரம் பாய்ந்த மனம் கலங்கவில்லை. அறை வாசலில் நிற்கும் டாக்டர் சந்தோஷத்திடம் ஏதோ ஹாஸ்யம் செய்கிறார்.

''ராஜாஜி! இந்த நிலையிலும்கூடத் தங்களால் எப்படிச் சிரிக்க முடிகிறது?'' என வினவுகிறார் சந்தோஷம்.

''ஏன், காலனே வந்தாலும்கூட நான் அவனைப் பார்த்துச் சிரிக்கத்தான் போகிறேன். போய்ச் சேர் என்றுதான் அவனிடம் சொல்லப் போகிறேன்'' என்று பதிலிறுக்கிறார் ஆண்மை மலையான ராஜாஜி.

பல மணிகளாகியும் அவர் குளியலறையிலேயே படுத்திருப்பது கண்டு, அவருக்குக் குறிப்பறிந்து பணிவிடை புரியும் பரம பாக்கியசாலிகளில் ஒருவரான இளைஞர் முரளி, ''நாங்கள் நாலு பேராக உங்களை அப்படியே எடுத்துக்கொண்டு போய் உங்கள் அறையில் சேர்த்துவிடுகிறோமே!'' என்று விண்ணப்பித்துக் கொள்கிறார்.

''என்னை நாலு பேர் தூக்க இன்னும் ரொம்பப் பொழுது இருக்கப்பா! அவசரப் பட வேண்டாம்'' என்று உறுதியாகச் சொல்கிறார் ராஜாஜி.

ராஜாஜியிடம் உள்ளன்பும் பெருமதிப்பும் பூண்டு கண்ணும் கருத்துமாக அவரைக் கவனித்து வரும் வைத்திய நிபுணர்களாகிய டாக்டர் வி. சத்தியநாராயணா, ஏ. எஸ். ராமகிருஷ்ணன், ஸாம் மோஸஸ் ஆகியோர் வற்புறுத்தியதன் பேரில் ராஜாஜி தமது அறைப் படுக்கைக்குக் கொண்டு வரப்படுகிறார்.

திடுமென ஓர் உற்சாகம் ஏற்படுகிறது ராஜாஜிக்கு. பேரப்பிள்ளை கோபாலகிருஷ்ண காந்தியிடமும், புத்திரருக்குச் சமமான



ராஜாஜியின் பேரர் தாங்கிய மண் பந்திலிருந்து திவ்விய சரீரத்தை முப்படையினரும் மரியாதை செலுத்திக்கொண்டு ஹைமேடைக்குக் கொண்டு செல்லப் போகிறார்கள்.





■ தமிழக முதல்வர் திரு கருணாநிதி, மந்திரிகள் திரு மாதவன், திரு ப. உ. சண்முகம், சுதந்திரக் கட்சித் தலைவர்களான திரு ஜி. கே. சுந்தரம், திரு தாண்டே ஆகியோர் சோகமே உருவாக நிற்கின்றனர்.

■ வழி நெடுக அஞ்சலி செலுத்த வந்த மக்கள் வெள்ளம் கரை புரண்டது.

எஸ்.வி.எஸ்.ஸிடமும் சுமார் முக்கால் மணி நேரம் தமது வாழ்க்கை நிகழ்ச்சிகள் பலவற்றை எடுத்துக் கூறுகிறார். தாம் கல்லூரி மாணவராக இருந்தபோது ஷேக்ஸ்பியர் கவிதைக்குப் புதியதொரு பொருள் கூறிப் பேராசிரியர் டேய்ட்டின் பாராட்டினைப் பெற்றது, பிற்பாடு தாம் சென்னை மாகாண முதன் மந்திரியாகி நிகழ்த்திய பட்ஜெட் உரையைப் படித்துவிட்டு அப்போது ஸ்காட்லாந்திலிருந்த டேய்ட் அதன் இலக்கிய நயத்தை வியந்து எழுதியது. இப்படிப்பட்ட சுவாரசியமான சம்பவங்களைக் கூறினார். அவரது கருணை இதயத்தில் அனவரதமும் வியாபித்துள்ள மதுவிலக்குப் பற்றி உரையாடல் தொடர்ந்தது. தாம் சிறுவனாக இருந்த காலத்தில் தமது பிறந்த ஊராகிய தொரப்பள்ளியில் மது அரக்கனுக்கே உயிரைக் கொடுத்த ஓர் ஏழையைப் பற்றித் துயரத்துடன் குறிப்பிட்டார். ராஜாஜியின் நெஞ்சை இவ் விஷயம் எவ்வளவு ஆழமாக நோகச் செய்கிறது என்று தெற்றெனத் தெரிந்தது. ராஜாஜி நீண்ட நேரம் தொடர்ச்சியாகப் பேசியது இதுவே கடைசி முறை எனலாம்.

மறுநாள் ராஜாஜிக்குக் கடுமையான குளிர் நடுக்கம் உண்டாகிறது. வைத்தியர்கள் 'ரைகர்' என்ற இந்தக் குளிர் ஜுரத்தைக் கட்டுப்படுத்துகிறார்கள். மீண்டும் இதுபோல் நடுக்கம் கண்டால் ராஜாஜியால் அதற்கு ஈடு கொடுப்பது சாத்தியமில்லை என்கிறார்கள்.

☆ ☆ ☆

பல்வேறு பரிசோதனைக் கருவிகள் ராஜாஜியின் வீட்டுக்கே கொண்டுவரப்படுகின்றன. எக்ஸ்ரே, ரத்தம் இத்தியாதி சோதனைகள் நடக்கின்றன. டாக்டர் லக்ஷ்மிகாந்தம் இதய சோதனைகளும் செய்கிறார். வைத்திய நிபுணர்களின் ஊகம் உறுதிப்படுகிறது. ராஜாஜிக்கு யுரேமியா என்ற நோய் ஏற்பட்டிருக்கிறது.

அதாவது சிறுநீர் உப்பு ரத்த ஓட்டத்தில் கலந்திருக்கிறது. இந்த உப்பைக் கரைத்து வெளியேற்றினாலொழிய, உயிர் தருகிற ரத்தமே நச்சு மயமாகி உயிரைக் குடித்து விடுமாம்!

உள்ளத் தூய்மைபோலவே உடல் தூய்மையிலும் ஒப்பற்று விளங்கிய ராஜாஜி, குடிநீர் பரம சுத்தமாக இருக்குமோ இராதோ என்ற சம்சயத்தில் தண்ணீர் பருகுவதை வெகு காலமாகவே மிகவும் குறைத்து வந்திருக்கிறார். அதனால் நீரினால் வரக்கூடிய பல நோய்களிலிருந்து தப்பி வந்திருக்கிறார். ஆனால் இப்போது தண்ணீர் குறைவினாலேயே ரத்தத்தில் 'யூரியா' வண்டல் சேர்ந்திருக்கக்கூடும் என்று ஓர் ஊகம்.

அதெப்படியானால் என்ன? பரமஹம்ஸ ராமகிருஷ்ணர் கூறினாற்போல், சரீரத்தில் வசிப்பதற்காக உயிரானது ஏதோ ஒரு வியாதி என்கிற பெயரில் வாடகை கொடுத்து விட்டுத் தானே வெளியேற வேண்டியிருக்கிறது?

ராஜாஜிக்குத் திரவ ஆகாரங்களை நிறையக் கொடுத்து, அதன் மூலம் யூரியாவைக் கரைத்து வெளிப்படுத்த வேண்டும் என்று வைத்தியர்கள் விதிக்கிறார்கள்.

ஆயினும் ராஜாஜிக்கு வாய் மூலமாகப் போதிய நீராகாரம் ஊட்டுவது சிரமமாக இருக்கிறது. ஓரிரு தினங்கள் பொறுத்துப் பார்த்தபின் ஜெனரல் ஆஸ்பத்திரியில் சேர்ப்பதென முடிவு செய்யப்படுகிறது.

☆ ☆ ☆

டிசம்பர் 17-ந் தேதி ஞாயிற்றுக்கிழமை ராஜாஜி ஜெனரல் ஆஸ்பத்திரியில் விசேஷ வார்ட் 42ல் சேர்க்கப்படுகிறார்.

முன்பு சொன்ன வைத்திய நிபுணர்களோடு டாக்டர் மோகன்தாஸும், டாக்டர் வி. ராஜகோபாலனும் சேர்ந்து கொண்டு ராஜாஜியின் உயிரை மீட்டுத் தரும்



ராஜாஜிக்குப் பணிவிடை புரியும் பாக்கியம் பெற்ற ஸ்ரீ முரளி நாளிதழை வாசிக்க உன்னிப்பாய்க் கவனிக்கிறார் தலைவர்.

உத்தமப் பணியில் அயராமல் சளைக்காமல் ஈடுபடுகிறார்கள்.

அன்று அவரை ஆஸ்பத்திரிக்கு வந்து பார்த்த முதல்வர் திரு கருணாநிதியோடும், திரு நெடுஞ்செழியனோடும் ராஜாஜி ஓரிரு வார்த்தைகள் உரையாடினார். வைத்திய சாலையில் ராஜாஜி இருந்தபோது, பாரத குடியரசுத் தலைவரிலிருந்து தொடங்கிப் பல் வேறு துறையினர் அவரை வந்து கண்ட போதும், அவர் நன்கு இனம் புரிந்துகொண்டு பேசியது தமிழக முதலமைச்சரிடம் மட்டுமே எனலாம். பகை அற்று அருளும் அவரது நன்னெஞ்சை உலகுக்கு அறிவிக்கவே இப்படி நிகழ்ந்ததோ!

அன்றே ராஜாஜிக்கு 'ட்ரிப்' மூலம் திரவ உணவு செலுத்தத் தொடங்குகிறார்கள். அதாவது ரத்தக் குழாய் மூலம் சொட்டுச் சொட்டாக நீராகாரம் அவரது உடலுக்குள் செலுத்தப் படுகிறது.

ராஜாஜிக்குப் பூரணமான உணர்வு இருக்கிறதா என்று கூடியிருந்தோர் சந்தேகிக்கிறார்கள். அவர் தெளிவாக, ''பாப்பா இங்கே இல்லையா? பாப்பா எங்கே படுத்துப்பா?'' என்று வினவுகிறார்.

'பாப்பா'வான ஸ்ரீமதி நாமகிரி ராஜாஜியைப் பிதாவாகப் பெறுவதற்கு மகத்தான பாக்கியம் செய்திருக்க வேண்டுமெனில், ராஜாஜியும் அந்த அம்மையாரைப் புதல்வியாகப் பெறுவதற்குக் கொடுத்து வைத்திருக்க வேண்டும். தந்தையை அன்றிப் பிரபஞ்சமே இல்லை என்று அவரது சேவைக்கே தம்மை அர்ப்பணித்துக் கொண்டவர் அல்லவா ஸ்ரீமதி நாமகிரி அம்மாள் ?

ராஜாஜி ஆஸ்பத்திரியில் இருப்பதால் 'பாப்பா' இரவில் உடன் தங்கியிருக்கவில்லை என்றும், அவரது பேரன் ராஜமோகன்காந்தி, 'கல்கி' ஸ்ரீ அனந்தநாராயணன் ஆகியோர் அவருடன் இருப்பதாகவும் அவருக்குத் தெரிவிக்கப்படுகிறது.

அதன்பின் அறுபது மணிகள் ராஜாஜி அமைதி இழந்த தவிப்பிலும், பூரண உணர் விழுந்த நிலையிலுமாக ஊசலாடுகிறார்.

மறுபடியும் திரும்பிக் கொண்டால் ஆபத்தாகும் என்று டாக்டர்கள் எச்சரித்திருந்த ரைகர் நடுக்கமும் காய்ச்சலும் 21ந் தேதி மீண்டும் வந்து தொலைக்கிறது.

சிகித்சை தீவிரமாகிறது.

நர்ஸ் ஏதோ ஊசி போடுகிறார். அதே போதில் வைத்தியர் பரிசோதனை செய்கிறார். முரளி ராஜாஜியின் காலில் ஸாக்ஸ் போடுகிறார். ராஜமோகன் அவரது கையைப் பிடித்து விடுகிறார்.

''எல்லாப் பிரச்னைகளையும் ஒரே சமயத்தில் தீர்க்க முடியாது'' (All Problems cannot be solved at the same time) என்ற வார்த்தைகள் தெள்ளத் தெளிய ராஜாஜியின் அதரங்களிலிருந்து உதிர்கின்றன. அட்சர லட்சம் பெறக்கூடிய அந்த வார்த்தைகளுக்கு எத்தனையோ விதத்தில் வியாக்கியானம் செய்யலாம்.

மறுபடியும் உணர்வு குறைந்த நிலை.

வெள்ளி இரவு டாக்டர், ''எப்படி இருக்கிறீர்கள்?'' என்று கேட்டவுடன் ராஜாஜி பளிச்சென்று, ''I am happy'' (நான் மகிழ்ச்சியுடன் இருக்கிறேன்) என்கிறார். தள்ளாத பருவத்தில், மெலிந்து நலிந்த உடலில் பலவித வியாதிகள் கண்டு, தேகம் முழுதும் ஊசியும் குழாயுமாக இருக்கும்போதும் 'மகிழ்ச்சி'யாக இருந்த மகாநுபாவர்!

டிசம்பர் 23ந் தேதி சனிக்கிழமை அதிகாலை ராஜாஜியின் உடல்நிலை மிகவும் மோசமாகிறது. அவரைப் படுக்கையில் ஒருபுறத்திலிருந்து மறுபுறம் திருப்ப முயன்றபோது அவர்பிரக்ஞை இழந்திருப்பதாகத் தெரிகிறது.

உலக மாரதியான ராஜாஜியின் உயிரைக் காப்பதற்கு வைத்திய சாஸ்திரத்தின் மூலம் என்னவெல்லாம் செய்ய இயலுமோ அத்தனையும் செய்கின்றனர். கருவி மூலம் பிராணவாயு செலுத்தத் தொடங்குகிறார்கள்.

விஷயமறிந்த மக்கள் திரள் திரளாக வைத்தியசாலையில் கூடுகின்றனர். வானொலிச் செய்தி மூலமாக வெளி உலகிலும் தகவல் பரவியதால், ராஜாஜி என்ற ஓர் உயிர் பிழைத்தெழ வேண்டும் என்பதே கோடி கோடி மக்களின் பிரார்த்தனையாகிறது.

ராஜாஜியின் வாயில் கங்கை நீர் வார்க்கப் படுகிறது. கர்ண மந்திரமும் ஓதப்படுகிறது. புண்ணிய ஜீவன் ஊசலாடிக் கொண்டிருக்கிறது.

பரிசுத்தப் பெரு வாழ்வு நடத்திய மகாத்மாவை ஏன் இறைவன் இப்படிச் சோதிக்கிறான்? யமனை வரவேற்கத் தாம் தயாராக இல்லை என்றே அவர் சொல்லி வந்தார். சுய வாழ்வு என்பதாகக் குறுகிய எல்லைக்குள் தம்மை முடக்கிக் கொள்ளாத அந்தத் தியாக நிதி, உலகுக்கு இன்னமும் பணி செய்வதில் உற்சாகம் குன்றாததாலேயே காலனை விரட்ட விரும்பினார். தான், தனது என்ற அகங்காரத்தைத் தொலைத்துவிட்டுக்

துளை மூங்கிலாக இருந்த ராஜகோபாலர், கோபாலனின் கையில் வேணுவாக இருந்தார். அந்தக் குழல் மூலம் ஆத்மிகம், இலக்கியம், அரசியல், நன்னெறி எல்லாவற்றையும் மதுர கீதங்களாக வடித்தான் கண்ணன். குழல் மேலும் இசை பாட விரும்பியது. கோபாலனே இந்த உலகுக்கு இத்துணை நீண்ட காலம் ஊதியதே போதும் என்று தீர்மானித்துவிட்டான் போலும்! சர்வ சங்கபரித் தியாகம் செய்த குழல் சேவை புரிகிற ஆசையையும் தியாகம் செய்ய வேண்டும் என்று கருதியிருப்பான் போலிருக்கிறது. தன்னுடைய ஒரே ஆசையை விடச் செய்வதற்காகவே அதைச் சோதனை செய்தானே?

அந்தச் சோதனையிலும் வேதனையிலும்கூட ஓர் அற்புதம். ராஜாஜியின் இதயமே அந்த அற்புதம். எதற்கும் கலங்காத சிங்கத்தின் இதயமல்லவா அது? அவரது இதய இயக்கத்தைக் காட்டும் மானிட்டரிங் கருவி, இத்துணை நெருக்கடியான கட்டத்திலும் அவருடைய இதயம் நம்பவொண்ணாத சக்தியுடன் சகஜமாக இயங்கிக் கொண்டிருப்பதைக் காட்டுகிறது. தொண்ணூற்று நாலு வயதான ஒருவருக்கு இத்தனை பசுமையான இதயமா என்று வைத்தியர்களே வியக்கின்றனர்.

அந்த இருதய சக்தியால்தான், வாழ்நாள் முழுதும் போராட்டத்தின் மேல் போராட்டமாக நடத்திக் கொண்டிருந்த சத்திய தர்ம பராக்கிரமர் இப்போது காலனுடனும் சளைக்காமல் போராட முடிகிறது!

ஞாயிற்றுக்கிழமை. மக்களின் மனத் தாமரையை மலர்த்தியது ஞாயிறு. ராஜாஜியிடம் காலன் சளைத்துவிட்டதுபோல் தோன்றியது. முதல் நாள் மாலை வரையில் பயங்கரமாக விழுந்து கொண்டேயிருந்த ரத்த அழுத்தம் அதிசயிக்கத்தக்க விதத்தில் உயர்ந்து உயர்ந்து வந்து இப்போது ஏறக்குறைய சகஜ நிலை அடைந்து விட்டது! மூச்சுத் திணறல் குறைந்து பிராணவாயுக் கருவிகூட அகற்றப் பட்டிருந்தது!

வெளி உந்துதலைப் புரிந்து கொண்டு அதன்படி நடக்கிற சக்தி ராஜாஜிக்கு ஏற்பட்டுவிட்டது. அது மட்டுமில்லை. குறுந்தாடியை அடிக்கடி தடவிவிட்டுக்கொண்டார்.

ஆஸ்துமா முதலிய கொடிய நோய்களுக்கு ஆளான போதிலும் ராஜாஜி ஒருபோதும் வெளியுலகுக்குத் தம்மை நோயாளியாகக் காட்டிக் கொண்டதில்லை. பளிச்சென்ற முகமும், பளிச்சென்ற உடையும், அவற்றை விடப் பளிச்சிடும் மனமுமாகவே என்றும் காணப்பட்டவர் அன்றோ? இன்று அவரது உள்ளக் குறிப்பைப் புரிந்து கொண்டு, குறுந்தாடி மழிக்கப்பட்டது. அப்போது ராஜாஜி பாங்குறத் தமது உதட்டை மடித்துக் கொண்டதையும், ஒரு கன்னத்தில் கேச விசர்ஜனம் முடிந்ததும் தாமாக மறு கன்னத்தைத் திருப்பிக் காட்டியதையும் ரசித்து, ''அண்ணா (ராஜாஜி குடும்பத்தினர் அவரை அண்ணா என்றே அழைப்பார்கள்) வுக்கு எப்போதும் எல்லாமும் பரம சுத்தமாகவே நடக்கணும். இப்பவும் அந்த உன்னிப்புக் குறையவில்லை'' என்று அவரது திருமகள் லக்ஷ்மிதேவதாஸ் உருக்கத்துடன் கூறினார்.

ராஜாஜியின் தலைமாட்டில் வந்து நின்றார் ஸ்ரீ சதாசிவம். ராமபிரான் லட்சுமணனை, ''வெளியில் உலவும் என் பிராணன்'' என்றார். அந்தச் சொற்றொடருக்கு என்ன பொருள் என்பதை ராஜாஜியின் விஷயத்தில் நிதரிசனமாகக் காட்டிவந்திருப்பவர் ஸ்ரீசதாசிவம். ராஜாஜி பிராணனுக்குத் தவித்தபோது இந்த 'வெளிப் பிராணன்' என்ன பாடு பட்டிருக்



## சக்கரவர்த்தி எங்கே?

பாராண்ட மாமேதை பாரத ரத்னா
பாரதத்தைத் தவிக்கவிட்டுச் சென்றதெங்கே?
வாராத மாமணிபோல் வந்து இங்கே
வாய்மைக்குப் பொருளாகி வாழ்ந்த கோமான்
சீரான வழிகாட்டி யாக இந்த
செகத்திற்கு அரசியல்தேர் ஓட்டிக் காட்டும்
சாரதியாய் ஆசானாய் இருந்த பூமான்
சக்ரவர்த்தி நமைவிட்டு எங்கே சென்றார்?

மூடிவிட்டாய் கண்ணிமைகள்: ஆனால் இங்கே
முடியவில்லை சிந்துகின்ற கண்ணீர் வற்ற!
ஓடிவிட்டாய் சொர்க்கவாசல் நோக்கி; இங்கே
ஓயவில்லை விம்முகின்ற நெஞ்சம் கோடி!
நாடிருக்கும் வரையுன்றன் நாமம் என்றும்
நல்லோர்கள் உள்ளமெல்லாம் வாழும்; இங்கு
ஏடிருக்கும் வரையுன்றன் சரிதம் போற்றி
ஏற்றமிகு புகழ்சாற்றும்; புனிதம் கொள்ளும்!

— பொன்னகர் மாணிக்கம், எம். எல். ஏ

ரும் என்பதைச் சொல்லத் தேவையில்லை. இப்போது 'அண்ணா' சிறிது தேறி வருகிறார் என்ற தெம்பிலேயே அவரருகே சென்று குனிந்து கொண்டு, ''அண்ணா! நான் சதாசிவம் வந்திருக்கேன்'' என்று தழு தழுத்துக் கூறினார். ''ஓ! தெரிகிறது'' என்று ராஜாஜி வாயால் சொல்லாமலே தலையணை யில் தமது சிரத்தை உருட்டிக் காட்டினார்.

டாக்டரொருவரிடம், "No Pain" (உபாதை இல்லை) என்று தீர்மானமாகக் கூறினார் ராஜாஜி. அதுவே ராஜாஜியின் திருவாயி லிருந்து வந்த கடைசி மணிமொழிகள்! ஆழ் வார் சொன்னபடி, எல்லையில் நலத்தைப் புல்க இருந்தவருக்குப் பிணி ஏது? ''ஹரி உலகின் பிணி தீர்ப்பாயாக'' (ஹரிதும ஹரோ ஜனகீ பீரு) எனக் கதறினாள் மீரா பாய். இங்கே ஒரு புனித ஜீவனுக்கு உலகின் பிணிப்பு தீரப் போகிறது. அதன் முன்பே பிணி போய் விட்டது!

உலகமே விச்ராந்தியாகப் பெருமூச்சு விட்டது! மகா மாயையின் விளையாட்டை அறியாத அசட்டு உலகம்! அணைவதற்கு முன்னால் தீபத்தைக் கொழுந்து விட்டெரியச் செய்வதன்றோ மகா மாயையின் பிரபாவம்?

மாய வாழ்க்கையிலிருந்து மாயாத வாழ்க்கைக்கு மக்களைத் திருப்பிய இயேசு நாதன் அவதரித்த பெருநாள். டிசம்பர் 25ந் தேதி. மாதங்களுள் சிறந்த மார்கழி மாதத் திங்கட்கிழமை. சர்வ தேசங்களும், சர்வகாலத்திலும் மறக்கவொண்ணாத தினம்.

பிறவியின் வாசனைகள் அனைத்தும் தீர்கிற கர்மகதியின் அற்புதத்தை டிசம்பர் 25ந் தேதி கண்டுகொள்ள முடிந்தது. ஆதி நாட்களில் ராஜாஜியைச் சித்திரவதை செய்து வந்தது ஆஸ்த்மா நோய். பிற்பாடு அந்த நோய் குணமாயிற்று. குணமாயிற்று என்பதைவிடக் 'குணப்படுத்திக் கொண்டார்' என்பதே அதிகப் பொருந்தும். 'ராஜாஜி தமது சுத்தமான வாழ்க்கையாலும், மனத் திண்மையாலுமே ஆஸ்துமாவைக் குணப் படுத்திக் கொண்டார்; எனக்கு அந்த மனச் சங்கற்ப பலமில்லை' என்று ராஜன் பாபு சொல்வாராம்! பல்லாண்டுகளுக்கு முன் ராஜாஜி விரட்டி யடித்த அந்த நோயின் 'வாசனை' இன்றைக்கு எவ்வாறோ திரும்பி விட்டது! ராஜாஜியின் இருதயமும், சிறு நீரகமும் நம்பிக்கையூட்டும் முறையில் செயற் பட்டபோது, இந்தப் பழைய ஆஸ்துமா பழி தீர்க்க வந்தது போல் அவரிடம் திரும்பியது. இதனால் மூச்சுக் குழல்களில் ஏற்பட்ட நெரி சலில், இரைப்பில் மலருடல் தனியாகத் தவித்தது. டாக்டர் வி. ராஜகோபால் மணிக் கணக்காக ராஜாஜிக்குப் பிடிவாத மாகப் பிராணவாயுவைச் செலுத்திக் கொண் டிருந்தார். ஆயினும் நுரையீரல்கள் மேன் மேலும் பழுதாகிக் கொண்டே வந்தன.

இதயம் மட்டும் இன்னமும் சளைக்கவில்லை. கப்பும் கிளையும் விட்டு வளர்ந்த இந்த மகா விருட்சம் எந்த விநாடியும் சாய்ந்து விடக் கூடும் என்கிற உச்ச கட்டம் ஏற்பட்ட பின்னரும் சுமார் பன்னிரண்டு மணிகள் இத யம் எப்படியோ இயங்கிக் கொண்டே இருந் தது. மறு பிறப்புக்குக் காரணமான மாயச் சாயையில் இழையளவுகூட மீதமில்லாமல் உருவி எடுத்துவிட்டு இந்த வியக்தியைத் தன் னுடன் நிரந்தரமாகச் சேர்த்துக் கொள்ள இறைவன் எண்ணி விட்டவன் போலும்!

இனி முழுக்க முழுக்க இறைவன் விட்ட படியே, நம் கையில் ஏதுமில்லை என்கிற நிலை பிற்பகல் மூன்றரைமணிக்கு ஏற்பட்டு விட்டது.

மகாபாரத காலத்தில் பீஷ்மராக வந்து விஷ்ணு சஹஸ்ரநாமத்தை ஓதிய மகாபுருஷ னின் அந்திம தசையில் அதே சஹஸ்ர நாமத்தை நெக்கு நெக்குருக ஓதினார் ஸ்ரீமதி எம். எஸ். ஆதியில் பீஷ்மர் அம்புக் கூட்டின் மீது சயனித்திருந்தார். இன்று ராஜாஜியின் உடல் முழுதும் இன்செக்ஷன் ஊசிகள் சல்ல டைக் கண்ணாகத் துளைத்திருக்கின்றன. பீஷ் மர் உத்தராயணத்துக்காகக் காத்திருந்தார். பஞ்சாங்கப்படி பொங்கலன்று உத்தராயணம் வருகிறதென்னினும், வான சாஸ்திரத்தின் சரி யான கணக்குப்படி டிசம்பர் 22ந் தேதி சூரிய னின் வடக்குச் சஞ்சாரம் தொடங்கி விட்ட தாம். இதுவே உத்தராயணம்தான். பீஷ்மர் தமது மனம் இடம் கொடுக்காமலேயே கௌரவர்களின் பக்கம் போராட வேண்டி யிருந்தது. அந்தக் குறை தீரவே ராஜாஜி யாகப் பிறந்தாரோ என்னவோ? தம்மளவில் தர்மத்தின் மூர்த்தியாக இருந்ததோடு மட்டு மின்றி, தர்மக் கட்சியிலேயே இருந்து போராடிக் குறை தீர்த்துக் கொண்டார்!

'பஜகோவிந்தம்' எழுதிய பரம பாகவத ருக்கு இசையஞ்சலி செலுத்தினார் எம். எஸ்:

**பஜ கோவிந்தம் பஜ கோவிந்தம்**
**ஸம்ப்ராப்தே ஸந்நிஹிதே காலே**

'காலே'யா? காலனுக்கு இங்கென்ன வேலை? மீண்டும் பிறப்பெடுக்கும் சாதாரண மானு டர்களை அல்லவா காலன் அணுகுவான்?

ராஜாஜியிடம் காலனுக்கு வேலை இல்லை. அவருக்கு இனி ஏது பிறவி? சரணாகதி செய்த வர்களுக்கு மரண கதி இல்லை.

புனிதம் செறிந்த துயரக் குரலில் ''ஓம் ஸ்ரீமதே நாராயணாய நம: நாராயண சர ணௌ சரணம் ப்ரபத்யே'' என்று ராஜாஜி யின் காதருகே ஓதுகிறார் அவரது அருமைக் குமாரர் ஸ்ரீ சி. ஆர். நரசிம்மன்.

அனைவரது கண்டங்களும் அந்த அடைக் கல மகா மந்திரத்தை ஒலிக்கின்றன.

**ஓம் ஸ்ரீமதே நாராயணாய நம:**
**நாராயண சரணௌ சரணம் ப்ரபத்யே**

அதன்பின் அது ஒரு நோயாளியின் இரு ளறையாக இல்லை. வேங்கடரமண ஸ்வாமி யின் சந்நிதியாகவே மாறிவிட்டது.

**ஓம் ஸ்ரீமதே நாராயணாய நம:**

உலகுக்கெல்லாம் உபதேசங்களை எழுதிய கரங்களிலிருந்து உணவுக் குழாய்கள் அகற்றப் படுகின்றன.

**நாராயண சரணௌ சரணம் ப்ரபத்யே**

தள்ளாத பருவத்தில் அஹிம்சைத் தூதுக் காக அமெரிக்கா சென்ற பாதங்களிலிருந்து கட்டுக்கள் நீக்கப்படுகின்றன.

**ஓம் ஸ்ரீமதே நாராயணாய நம:**

பாரெல்லாம் பரமனைக் கண்டு தொண்டு செய்த கண்கள் இனி திறக்கமாட்டா என்பது உறுதியாகிறது.

**நாராயண சரணௌ சரணம் ப்ரபத்யே**

உலக நலனேயே அனவரதமும் சிந்தித்த சிரத்தில் ரத்த ஓட்டம் நின்று சில்லிட்டு விட்டதாக நர்ஸ் சைகை செய்கிறார்.

ஓம் ஸ்ரீமதே நாராயணாய நம:

மூச்செல்லாம் லோக க்ஷேமமாகவே வாழ்ந்தவருக்குச் செயற்கை சுவாச உதவியும் நிறுத்தப்படுகிறது.

நாராயண சரணௌ சரணம் ப்ரபத்யே

நெஞ்சு வலிக்க வலிக்க அத்தனை பேரும் ஜபித்துக் கொண்டிருக்க, எந்த வலியுமில்லாமல், அதிசயமான அமைதியோடு, அற்புதமான லயத்தோடு மகாத்மாவின் சுவாசம் சிறுகச் சிறுக அடங்கிக் கொண்டே வருகிறது.

எந்த விகாரமும் இம்மியும் இல்லை.

பரம சாந்தமாக உட்புகுந்து செல்லும் ஒரு சுவாசம் இருதய குகைக்குள் பரமாத்மாவிடம் ஒடுங்கி ஒன்றிவிடுகிறது.

ஹ்ருதய குஹா மத்யே கேவலம் ப்ரம்ம மாத்ரம்

தனக்குள்ளேயே பரம்பொருளை நுகர்ந்த பரமஞானிகளுக்கு இதயத்திலேயே சுவாசம் ஒடுங்கும் என்பார் பகவான் ரமணர்.

பிரம்ம ஞானிகளுக்கே உரிய அத்தகைய அற்புத முடிவினை — முடிவா, நிறைவா? — ராஜாஜி எய்திவிட்டார்.

மணி மாலை 5—44.

சூரியன் கிறுகிறுவென்று மேற்கு மலைவாயில் இறங்கி மறைந்தான்.

திருமேனி வெளிக் கொணரப்பட்டது. அவர் பெயர் தாங்கிய மண்டபத்தில் பள்ளி கொண்டான் என அவரைக் கிடத்தியதிலிருந்து நடந்த நிகழ்ச்சிகள் உலகறிந்தவை.

கண்ணனின் பெயர் சூட்டப்பட்ட மகானின் திவ்விய சரீரம் கிருஷ்ணாம்பேட்டையில் அக்னி பகவானுக்கு ஆஹுதியாயிற்று செவ்வாய் மாலையில். — ராஜாஜிக்குப் பிடித்தமான உபநிஷத மந்திர கோஷத்துடன்.

வாயு ரநிலம் அம்ருதமதேதம் பஸ்மாந்தம் சரீரம் |
க்ரதோ ஸ்மர க்ருதம் ஸ்மர க்ரதோஸ்மர க்ருதம் ஸ்மர ||

''சுவாசமானது என்றும் அழியாத காற்றுடன் கலந்துவிட்டது. சரீரம் மட்டுமே பஸ்மமாகிவிட்டது. மனமே! (செய்தவன் மறைந்தாலும்) செயல் நிற்கிறது. அந்தச் செயலை ஸ்மரிப்பாயாக!''

எல்லாப் புண்ணிய தீர்த்தங்களும் உண்மையான வைணவனின் உடலில் உறைகின்றன என்றார் நரஸிமேதா. புதனன்று காலையில் மஹோததி எனப்படும் வங்க விரிகுடாவில் மாகடலாம் ராஜாஜியின் அஸ்திகள் கரைக்கப்பட்டன.

நீராடுகையில் ஓதப்படும் புராதன மந்திரமும், அதற்கு ராஜாஜி தந்த நூதனப் பொருளும் அலை ஓசையில் கரைந்து ஒலித்தன.

யஸ்ய க்ஷயாய ஜின்வத ஆபோ ஜனயதா ச ந:

''தன்னைத் தானே இழந்துகொண்டு மற்றவரில் மகிழ்ச்சி காணும் தண்ணீரே! இதே போல் பூரணப் பொருளில் என்னையே கரைத்துக் கொள்வதில் எனக்கு மகிழ்ச்சி யூட்டுவாயாக!''



**ராஜாஜி உபயோகித்து வந்த அறை. இந்த அறையில் உள்ள நாற்காலியில் அமர்ந்துதான் எழுதுவார், படிப்பார்; தர்சிக்க வருபவர்களை வரவேற்பார். பக்கத்தில் இருக்கும் கட்டிலில் படுத்து உறங்குவார். சாய்வு நாற்காலிக்கு வலதுபுறமுள்ள நீள பெஞ்சியில் அவரது நாட்குறிப்புப் புத்தகம், எழுதும் தாள், பேனா, மேல் அங்க வஸ்திரம் யாவும் இருக்கும். எதிரிலுள்ள அலமாரியில் பைபிள், ஆங்கில அகராதி, சம்ஸ்கிருத அகராதி முதலியவையும் மருந்துகளும் கைத்தடிகளும் இருக்கும்.**








# கடும் அதிவெப்பத் தேவைகளுக்கு நம்பகமானவை

## ஃபயர்க்ரீட் மற்றும் ஃபயர்க்ரீட் சூபர்

## ஏசிசி யின் காஸ்டபிள் ரிஃப்ராக்டரிகள்

எவ்வடிவத்திலும் வார்க்கலாம், எந்த அளவிற்கும் உருவமைக்கலாம். சிறு துணுக்குகளாதல் மற்றும் தேய்மானம் இவற்றைத் தவிர்ப்பதோடு வெப்ப அதிர்ச்சிகளையும் தாங்க வல்லவை.

1350° செ. வரையிலுமான வெப்பநிலைகளுக்கு ஃபயர்க்ரீட், 1550° செ. வரையிலுமான வெப்பநிலைகளுக்கு ஃபயர்க்ரீட் சூப்பர்.

வாடிக்கையாளரின் தேவைக்குத் தகுந்தவாறு காஸ்டபிள் ரிஃப்ராக்டரிகள் கிடைக்கின்றன.

**ஏசிசி** — தரமான தயாரிப்புகளுக்கு நம்பகமான உத்தரவாதம்

தி அசோசியேடெட் சிமெண்ட் கம்பெனீஸ் லிமிடெட் 

ACC. 1033 TAM.







## பாக்கியசாலிகள்

ராஜாஜியின் அறிவாற்றலால் பயனடைய இத்தேசமே பெரும் பாக்கியம் செய்திருக்கிறதெனில் அவரது பிறந்த ஊரும் உற்றாரும் உறவினரும் எவ்வளவு பெரிய பாக்கியசாலிகள் என்பதைக் கூறவும் வேண்டுமோ !

தொராசூரில் அவரது இல்லம்.

ராஜாஜியின் அருமைத் தந்தை சக்கரவர்த்தி அய்யங்கார்.

ராஜாஜியின் மனைவியார் அலர்மேல் மங்கம்மாள்.

ராஜாஜியின் குடும்பம்.



## பதவிகள் பெருமையுற்றன

வழக்கறிஞராக வாழ்க்கை தொடங்கிய ராஜாஜி சேலம் நகரசபைத் தலைவராக விளங்கியதிலிருந்து கவர்னர் ஜெனரல் பதவி வரை எத்தனையோ பதவிகளை வகித்தார். பதவிகள் அவரால் பெருமையுற்றன.

சென்னை ராஜ்யத்தின் பிரதம மந்திரியாக ராஜாஜி இருந்தபோது அவருடன் பணியாற்றிய சக மந்திரிகளும், கவர்னர் லார்ட் எர்ஸ்கினும்.

1946ல் டில்லி இடைக்கால சர்க்கார் மந்திரி சபை.





மேற்கு வங்காள கவர்னராக 1947 ஆகஸ்ட் 15ந் தேதி பதவிப் பிரமாணம் செய்கிறார்.



மவுண்ட்பாட்டன் தம்பதிகளுக்குப் பிரிவுபசாரம் அளிக்கிறார் கவர்னர் ஜெனரல் ராஜாஜி.

கவர்னர், கவர்னர் - ஜெனரல் ஆகிய பெரும் பதவிகளை வகித்த ராஜாஜி சென்னை ராஜதானியில் இக்கட்டான நிலைமை ஏற்பட்டபோது முதன் மந்திரி பதவியை ஏற்கவேண்டும் என்று கோரப்பட்டார். பெருந்தன்மையுடன் கோரிக்கையை ஏற்றுக் கம்யூனிஸ்டுகளின் செல்வாக்கை ஒடுக்கியதுடன் ரேஷனை நீக்கியது போன்ற பிரமிக்கத்தக்க சாதனைகளைப் புரிந்து தமிழ்நாட்டின் பெருமையை உயர்த்தினார். 1952ல் ராஜாஜியின் தலைமையில் அமைந்தது சென்னை ராஜ்ய மந்திரி சபை. அன்றைய கவர்னர் ஸ்ரீ ஸ்ரீபிரகாசா.



## அரியன செய்த எளியவர்

மாபெரும் பதவிகளை வகித்தபோதும் காட்சிக்கு எளியவராயிருந்தது மட்டுமின்றி மனத்தாலும் எளியவராகவே இருந்தார் ராஜரிஷி ராஜாஜி. செயற்கரிய செய்த எளியவர் அவர். எளியன செய்த ஏற்றமிக்கவரும் அவரே.

கவர்னர் - ஜெனரல் பதவியிலிருந்து விடுபட்டு வரும்போது ராஷ்டிரபதி மாளிகையைப் பாதுகாக்கும் பொறுப்புடைய குதிரைப் படையினரிடமும் விடைபெற்றுக் கொண்டார்.



காந்திஜி டண்டி யாத்திரை செய்தபோது தமிழகத்தில் ராஜாஜியின் பிரசித்தி பெற்ற வேதாரண்ய உப்பு சத்தியாக்கிரஹம் நடந்தது.





கவர்னர் ஜெனரலான ராஜாஜி பயிர்த் தொழிலின் ஏற்றத்தை விளக்க ஏர் செலுத்தி மகிழ்ந்தார்.



சென்னையில் அகில இந்திய ரேடியோவைத் தொடங்கி வைத்தார் சென்னைப் பிரதமர் ராஜாஜி. அவருக்கு அருகில் முதல் கண்ட்ரோலர் லயனல் ஃபீல்டன்.




பம்பாயில் ஸ்ரீ கே. எம். முன்ஷியிடமிருந்து கௌரவ டாக்டர் பட்டம் பெறுகிறார் ராஜாஜி.



இலக்கியச் செல்வங்களை எழுதிக் குவித்த ராஜாஜி டில்லியில் நடைபெற்ற ஆசிய எழுத்தாளர் மகா நாட்டுக்கு விஜயம் செய்த எழுத்தாளர்களுடன் காட்சியளிக்கிறார்.






**தவறாமல் பிரஷ் கொண்டு பல் துலக்கி, ஈறுகளைத் தேய்த்துக் கொடுத்தால், ஈறு உபாதைகளையும் பற்சிதைவையும் தடுக்கலாம்.**

ஈறுகளை உறுதியுடனும் ஆரோக்கியத்துடனும் வைத்திருக்க, அவற்றைத் தினமும் தவறாமல் தேய்த்துக் கொடுப்பது சிறந்த வழி என்று பல் வைத்தியர்கள் கூறுகிறார்கள். அது போலவே, பற்சிதைவைத் தடுக்கும் சிறந்த வழி, இரவிலும் காலையிலும், ஒவ்வொரு முறை உணவருந்திய பின்னும், தவறாமல் பிரஷ் கொண்டு பல் துலக்கி, பற்சிதைவைத் தோற்றுவிக்கும் உணவுத் துகள்களை அகற்றுவது. தவறாமல் போர்ஹென்ஸால் பற்களைத் துலக்கி, ஈறுகளைத் தேய்த்துக் கொடுக்க, உங்கள் குழந்தைக்குக் கற்பியுங்கள். ஏனெனில், போர்ஹென்ஸ் பற்பசை பல் வைத்தியர் ஒருவரால் உருவாக்கப் பட்டது.

**போர்ஹென்ஸ் பற்பராமரிப்பு பற்றிக் கற்பிக்க இதுவே தக்க வயது.**

---

**இலவசம்!** **"பற்களையும் ஈறுகளையும் பராமரிக்கும் முறை" என்னும் விவரமான வண்ணப் புத்தகம்*** பெற, 25 பைசா தபால் தலையுடன் (தபால் செலவுக்காக) கீழ்க்கண்ட கூப்பனை 'மானர்ஸ் டென்டல் அட்வைசரி ப்யூரோ, தபால் பை எண் 10031, பம்பாய்-1' என்னும் முகவரிக்கு அனுப்புக.

K-6

பெயர் ______________________ வயது __________

முகவரி ______________________________________

*விரும்பும் மொழியின் கீழ் கோடிடவும்—ஆங்கிலம், இந்தி, மராட்டி, குஜராத்தி, உருது, வங்காளி, அஸ்ஸாமி, தமிழ், தெலுங்கு, மலையாளம், கன்னடம்.




**போர்ஹென்ஸ்**

—பல் வைத்தியர் ஒருவரால் உருவாக்கப்பட்ட பற்பசை

102F-R4-173 TM

# பக்திப் பயிர்

## வினோபாஜி



24 - 12 - 72

பூஜ்ய சதாசிவம்ஜீ,

மரியாதை கலந்த வணக்கம். இரண்டு நாட்களாக பூஜ்ய ராஜாஜியின் உடல்நிலை பற்றிய செய்தி கேட்டு எங்களுக்கு மிகவும் கவலையாக இருக்கிறது. பூஜ்ய பாபாவும் மிகக் கவலையுற்றிருக்கிறார். காலை ரேடியோச் செய்தியைச் சொன்ன போது அவர் உணர்ச்சியால் தழுதழுத்து விட்டார். இன்று மத்தியானம் விஷ்ணு ஸஹஸ்ரநாமத்துக்குப்பின், கண்களில் நீர் ததும்ப அவர் மிகுந்த சிரமத்துடன் ஒரு சில வார்த்தைகள் ராஜாஜியைப் பற்றிப் பேசினார். அவர் பேசியதன் சாரத்தை - நகலை - இத்துடன் அனுப்பி வைக்கிறேன். சகோதரி ராதாவின் உதவியால் (ஹிந்தி மொழியில் உள்ள) அதைத் தாங்கள் புரிந்து கொள்ள முடியும்.

அன்பு சகோதரர் ராஜ்மோகனுக்கு என் நினைவைக் கூறுங்கள். பூஜ்ய ராஜாஜிக்கு வணக்கம்.

ஸ்ரீ ஜானகி தேவி பஜாஜும் இங்கு இருக்கிறார்கள். அவரும் கவலை தெரிவிக்கிறார். தம் நமஸ்காரங்களை ராஜாஜிக்குத் தெரிவிக்கச் சொல்லுகிறார். ஆண்டவனை அவர் நலமுற வேண்டுகிறார்.

இங்குள்ள சகோதரிகள் அனைவரும் தங்கள் நமஸ்காரங்களைத் தெரிவித்துக் கொண்டு பிரார்த்தனை புரிகிறார்கள்.

பூஜ்ய அம்மாவுக்கு நமஸ்காரம். சகோதரி ராதாவின் கடிதம் கிடைத்தது. அவருக்கு எங்களை நினைவுகூரவும்.

கௌதமின் வணக்கங்கள்

(கௌதம் என்பவர் காந்திஜியின் முக்கிய சீடர், ஜமுனாலால் பஜாஜ் அவர்களின் சகோதரர் குமாரர். தமது பதினைந்து வயது முதலே வினோபா அவர்களுடன் ஆசிரமத்தில் வாழ்ந்து வருகிறார்.)

### வினோபா பேசியது :

சில நாட்களாக ராஜாஜி நோய்வாய்ப் பட்டிருக்கிறார். இப்பொழுது, அவர் இந்த உடலில் எத்தனை காலம் இருப்பார் என்று கூற முடியாது. ஆண்டவன் என்ன நினைக்கிறாரோ, தெரியாது.

இப்பொழுது விஷ்ணு சகஸ்ரநாம பாராயண நேரம். அதனால் ஒரு முக்கியமான விஷயம் பற்றி உங்கள் கவனத்தை ஈர்க்க விரும்புகிறேன். காரணம், நேற்று சுப்புலக்ஷ்மி ராஜாஜியின் அருகில் அமர்ந்து விஷ்ணு சகஸ்ரநாமம் கூறினார். சரக ஸம்ஹிதையில், இறுதிக் கட்டத்தில் மருந்து கொடுப்பதைத் தவிர்த்து விஷ்ணு ஸஹஸ்ரநாமம் கூறுமாறு சொல்லப்பட்டிருக்கிறது. அதனால் ஒன்று, நோயாளி குணம் அடையலாம்; அல்லது விஷ்ணு ஸஹஸ்ரநாமத்தின் நினைவில் அமைதியாக ஆண்டவனை அடையலாம்.

ராஜாஜி பெரிய ஞானி. அதைக் காட்டிலும் அவர் பெரும் பக்தர். நமது சகோதரிகளில் ஒருத்தி அவரை மதராஸில் சந்தித்தாள். அப்பொழுது பிரம்ம வித்யா மந்திரைப்பற்றியும் சகோதரிகள் அங்கு பிரம்ம சூத்ர பாஷ்யம் போன்றவை படிப்பதுபற்றியும் சொல்லப்பட்டது. அதற்கு ராஜாஜி அவர்கள், 'அந்தத் தார்க்கிகத் தத்துவத்தில் ஏன் இறங்க வேண்டும்? சகோதரிகள் இரண்டு வேலை செய்யலாம். ஒன்று பயிர் செய்யலாம். மற்றொன்று பக்திப் பயிர் செய்யலாம்' என்றாராம்.

நான் இதை இங்கே குறிப்பிடுவது எதற்கென்றால் அவருக்குப் பக்தியில் சிரத்தை அதிகம். விஷ்ணு ஸஹஸ்ர நாமத்திலோ மேலும் சிரத்தை அதிகம். விஷ்ணு ஸஹஸ்ர நாமத்தின் கடைசிச் சுலோகம் இருக்கிறதே,

சங்க ப்ருத் நந்தகி சக்ரீ
சார்ங்க தன்வா கதாதர :
ரதாங்கபாணி: அக்ஷோப்ய :
ஸர்வ ப்ரஹரணாயுத :

இதை ராஜாஜி ஒரு கட்டுரையில் குறிப்பிட்டுள்ளார். இதில் 'சக்ரீ' என்று ஒரு சொல் வருகிறதே, அது சுதர்சனம் தரித்திருக்கும் பகவான் விஷ்ணுவைக் குறிக்கிறது. ஆனால் கடைசியிலும் 'ரதாங்கபாணி' என்று ஒரு சொல் வருகிறது. இதில் 'ரதாங்கம்' என்பதற்குப் பொருள் சக்கரம், பாணி என்றால் கை. இதன் பொருளும் 'சக்ரபாணி' ஆகிறது. ஆனால் மேலே 'சக்ரீ' என்று சொன்ன பொழுதே கொள்ள வேண்டிய பொருள் கொண்டாகி விட்டது. அதனால் ராஜாஜி அருமையானதொரு விளக்கம் தந்தார்: 'ரதாங்கபாணி என்பதற்குப் பொருள் சுதர்சன சக்கரம் ஏந்தியவர் அல்ல. பகவான் பக்தனது ரதத்தை (வாழ்க்கைச் சகடத்தை) பூமிக்குள் அழுந்த விடுவதில்லை. பக்தனின் ரதம் நன்றாகத் தூக்கி ஓட வேண்டும் என்பதற்காகச் சகடம் புதையாமல் கைகொடுத்து உதவுகிறான்!' 'என்றார்.

மாதம் ஒன்று, இரண்டு, மூன்று மெல்ல கவிழ்ந்து படுக்கும் நன்று

# மாதம் நான்கு ஐந்து, ஆறு
# மெதுவாத் தவழ்ந்து உதைக்கும் பாரு

மூன்றாவது மாதத்திலிருந்து உங்கள் குழந்தைக்குப் பால் மட்டும் போதாது. சீரான உடல் வளர்ச்சிக்கு உங்கள் குழந்தைக்குத் தேவை பாரெக்ஸ்...அதன் முதலாவது திடஉணவு. குழந்தையின் மென்மையான ஜீரணத்திற்கு ஏற்ற சரியான புரதச் சத்து கொண்டது பாரெக்ஸ்.

குழந்தைக்கு எத்தனை சீக்கிரம் திட உணவு கொடுக்க ஆரம்பிக்கிறீர்களோ அத்தனை நல்லது என்று டாக்டர்கள் கூறுகிறார்கள். குழந்தையின் சீரான வளர்ச்சிக்கு வேண்டிய சரியான புரதச் சத்துடன், கார்போ ஹைட்ரேட்டுகள், கால்ஷியம், பாஸ்பரஸ், வைட்டமின்கள் மற்றும் தாது உப்புகள் யாவும் அடங்கியது பாரெக்ஸ். பாரெக்ஸ் புத்தகத்தை இலவசமாகப் பெற 25 பைசா தபால் தலையை இணைத்து, டிபார்ட்மென்ட் K-I-P த.பெ. 16558, பம்பாய் 18 டபிள்யூ பி. என்னும் முகவரிக்கு எழுதுக. (எந்த மொழியில் வேண்டுமென்று தெரிவிக்கவும்).

**சீரான உடல் வளர்ச்சிக்குக் குழந்தையின் முதலாவது திடஉணவு.**




# பாரெக்ஸ்® – க்ளாக்ஸோ தயாரிப்பு

CMGF-21R-202 Tam

# ராஜாஜியின் ஜெயில் டைரி

**1922 ஜனவரி, 17உ.**

செவ்வாய். சிறை அதிகாரியின் பூட்ஸ் சப்தம் என்னை இரவு பதினொரு மணிக்கு எழுப்பிவிட்டது. சிறு சத்தம் கேட்டால்கூட விழித்துக்கொண்டுவிடுகிறேன். ஆழ்ந்த நித்திரை உண்டாவதில்லை. சிறை அதிகாரி வந்தபொழுது சாஸ்திரியார் படித்துக் கொண்டிருந்தாராம். அவ்வளவு நேரம் படிக்கக் கூடாது, உறங்க வேண்டுமென்று அதிகாரி கூறினாராம்.

இன்று காலையிலேயே எழுந்துவிட்டேன். எழுந்ததும் ஜபம் செய்து கொண்டிருந்தேன். வெகு நேரம் சென்றே கதவைத் திறந்தார்கள். ஏன் இவ்வளவு கால தாமதம் என்று பிரதம காவலாளியிடம் கேட்டேன். ''இன்று விடுமுறை நாள்'' என்று கூறினார். ''ஏன்? எதற்காக?'' என்று கேட்டதற்கு, ''வேல்ஸ் இளவரசர்'' என்று கூறிப் புன்னகை பூத்தார்.

மத்தியானம் ரொட்டியை அறுப்பதற்கு ஒரு கத்தியும், மாலையில் சவ்வரிசிக் கஞ்சியைக் குடிப்பதற்கு ஒரு சிறு கரண்டியும் அனுப்புவதாகச் சிறை உப அதிகாரி என்னிடம் கூறினார்.

காலைக் கடன்கள் முடிந்தபின் அரை மணி நேரம் திறந்தவெளியில் உலாவினேன். அதன் பிறகு ஒரு மணி நேரம் நூல் நூற்றேன். ஸ்ரீ எஸ். கே. விஜயராகவன் இரண்டு ராட்டினங்கள் அனுப்பியிருந்தார். அவற்றுள் கனமில்லாததை வைத்துக் கொண்டு கனமானதை மகமது கௌஸுக்குக் கொடுத்தேன். ஆனால் இப்பொழுது ஆஸ்பத்திரியிலிருந்து வந்தபின்னர் கனமான ராட்டினத்தையே உபயோகிக்கிறேன். அதுதான் சத்தமில்லாமல் சுழல்கிறது. கை ராட்டினம் மட்டும் இல்லாவிட்டால் சிறைவாசம் எவ்வளவு கஷ்டமானதாக இருக்கும்!

நேற்று இரவு திருக்குறளும், கிறிஸ்துவ வேத நூலாகிய பைபிளும் வாசித்தேன். பால் ரிச்சர்ட் என்பவர் 'கிறிஸ்துவுக்குச் சாட்டையடி.' என்ற பெயரில் ஆங்கிலத்தில் ஒரு நூல் எழுதியிருக்கின்றார். அதைக் கணேஷ் கம்பெனியார் எனக்கு அன்புடன் அனுப்பியிருக்கிறார்கள். அதை வாசித்தேன். கிறிஸ்துவின் உபதேசங்களுக்கும், நல்வாழ்க்கைக்கு முரண்பட்ட விதத்திலும் தற்காலத்தில் கிறிஸ்தவர்கள் என்று கூறிக் கொள்கிறவர்கள் நடந்து கொள்வதைக் கண்டிப்பதே பால் ரிச்சர்டின் நோக்கம். குறள் மாதிரிச் சிறு சிறு வாக்கியங்களாக எழுதியிருக்கிறார். சில வாக்கியங்கள் அழகாக அமைந்திருக்கின்றன. சில நன்றாக இல்லை. கணேஷ் கம்பெனியார் புத்தகங்களுக்கு ஏற்படுத்தும் அழகு அவற்றின் மதிப்புக்கு அதிகப்பட்டதாக இருக்கிறது.

என்னை மறுபடியும் ஆஸ்பத்திரிக்கு அழைத்துப் போகுமாறு சிறை அதிகாரி உத்தரவிட்டிருப்பதாகத் தெரிகிறது. எனக்கு என் அறையிலேயே இருக்கப் பிரியம் என்று ஆஸ்பத்திரி உதவி வைத்தியரிடம் கூறினேன். ஆஸ்பத்திரியிலுள்ள மூட்டைப்பூச்சிகளுக்கு என்னால் இரை கொடுக்க முடியாது. இரவு முழுவதும் பக்கத்தில் சட்டிகளை வைத்துக் கொண்டு உறங்குவது என்பதும் என்னால் பொறுக்க முடியாத காரியம். அது மட்டுமா? அங்கே நோயாளிகள் நோய் தாங்காமல் கத்திக் கொண்டும் அழுது கொண்டுமிருப்பார்கள். அதைக் கேட்க என்னால் சகிக்க முடியவில்லை. என் உடல் முழுவதும் நடுக்கமடைகின்றது. இங்கே தனிச் சிறைவாசமாயிருந்த போதிலும் அங்கிருப்பதை விட இங்கிருப்பதே மேல் என்று தோன்றுகிறது.

இன்று சாக்ரடீஸ் பிரசங்கத்தில் ஒரு பாகத்தைத் தமிழில் மொழிபெயர்த்தேன். பிற்பகலில் ராமாயணம் படித்தேன். என்னமோ மிகவும் பலஹீனமாகத் தோன்றுகிறது. மாலையில் உணவு நான்கு மணிக்கு உண்டேன். இளவரசருக்காக ஐந்து மணிக்குப் பூட்டிவிட்டார்கள். இருட்டும் வரை நூற்றுக்கொண்டிருந்தேன். கை ராட்டினம் அமைதியும் அழகும் நிறைந்த கவிதையாக இருக்கிறது. இருட்டிய பிறகு குறள் வாசித்தேன்.





# குழந்தைகளுக்குப் புரியும்

## ராஜாஜி

"தேவலோகத்துப் பாஷை சம்ஸ்கிருதம்'' என்றார் சாஸ்திரியார்.

''ஆண்டவன் பேசுவது தமிழ்தான்'' என்றார்கள் சிலர்.

''பகவான் பேசும் மொழி அனைவருக்கும் பொதுவான ஹிந்தி மொழி'' என்றார்கள் வடக்கத்தியார்.

சில வங்காளியர்கள் இதைக் கேட்டுச் சிரித்தார்கள்.

மராட்டிய வீரர்கள் ''அல்ல!'' என்றார்கள். ''எங்கள் மராட்டி பாஷையே பகவான் சிவ்ஜி பாஷை'' என்றார்கள்.

''பரமண்டலத்து ' பாஷை, ஆங்கிலம் அல்லவோ'' என்றார் ஆங்கிலேயப் பாதிரி.

''ஒரு நாளும் அல்ல; யாரும் பேசாத லத்தீன் மொழியே மேலிடத்துப் பாஷை'' என்றார் மற்றொரு பாதிரியார்.

''உங்களுக்கு உண்மை தெரியவில்லை. அரபி பாஷையல்லவோ ஆண்டவன் தினசரி பேசுவது. சில சமயந்தான் பிற மொழிகள் பேசுவான். குர்-ஆன் எந்தப் பாஷையில் அமைந்திருக்கிறது? அதிலிருந்து உங்களுக்குத் தெரியவில்லையா?'' என்று அரபி மௌல்வியார் வாதாடினார்.

இன்னும் பலர் இந்த விவாதத்தில் சேர்ந்துகொண்டனர். பெரிய சண்டை நடந்தது. எல்லோரும் போய் நேரில் பார்த்துவிட்டு வரலாம் என்று தீர்மானித்துச் சென்றார்கள்.

திரைக்குப் பின் பகவான் பேசினான்.

கீழே இறங்கும்போது ஒருவரோடு ஒருவர் பேசிக் கொண்டே இறங்கினார்கள்.

''பார்த்தாயா தம்பி! கடவுள் பேசினது தமிழ்'' என்றார்கள் தமிழர். ''எவ்வளவு சுத்தமாக வடமொழியே கலவாமல் பேசினான் உலகையாளும் பெருமான்!'' என்று சந்தோஷமாகச் சொன்னார்கள்.

''பார்த்தாயா! பகவான் பேசிய பாஷை, நம்முடைய ஹிந்தி. இந்த மூடர்களுக்கு இதிலிருந்தாவது அறிவு உண்டாகுமா!'' என்று பேசிக் கொண்டார்கள் வடக்கத்தியார்கள்.

''ஆகா! ஈசுவரன் வாயிலிருந்து வந்த மராட்டியைக் கேட்டாயா?'' என்றான் ஒருவன்.

''வங்காளம் அல்லவா ஆண்டவன் பேசியது? அதுதான் தேவ பாஷை!'' என்று வங்காளியர் சொன்னார்.

இவ்வாறே அராபியரும் ஆங்கிலேயரும் அமெரிக்கரும் பிரெஞ்சுக்காரர்களும் இன்னும் எல்லாரும் தத்தம் மொழியே தேவனுடைய மொழி என்று பேசிக்கொண்டு குதூகலத்துடன் சென்றார்கள்.

இந்த நிகழ்ச்சியைப் பார்த்துக் கொண்டிருந்த பறவைகள் தமக்குள் பேசிக்கொண்டன.



''இந்த மனிதக் கூட்டத்தின் மதியீனத்தைப் பார்த்தீர்களா! ஆண்டவன் நம்முடைய பறவை பாஷையல்லவோ பேசினான்?'' என்றன.

''ஆண்டவனுடைய சிறகுகள் திரை வழியாகக் கொஞ்சம் தெரிந்ததே! அது எவ்வளவு அழகு!'' என்றது ஒரு கிளி.

''ஈசுவரனுடைய தும்பிக்கையைப் பார்த்தாயா?'' என்று கேட்டது ஒரு யானை, தன் மனைவியைப் பார்த்து.

''திரையினூடே எனக்கு அவனுடைய அழகிய தந்தங்கள்தான் தெரிந்தன!'' என்றது பெண் யானை.

''ஆஹா! என்ன மௌன சுவரூபி'' என்றார் ஒரு முனிவர்.

''இறைவனுடைய இந்தக் கானத்தைக் கேட்ட பின் வேறு ஒரு சங்கீதமும் வேண்டாம்'' என்றார் ஒரு சங்கீத வித்வான்.

''பலருக்குப் பலவேறு உருவங்களாகத் தோன்றும் இந்தப் பொருள் பொருளாகாது. அது பொய்!'' என்றார் நாஸ்திகர்.

''பொய்யல்ல. மாயை. நமக்கு விளங்காத ஒரு பொருள் அனைத்தையும் கடந்த பொருள். அதைத் தமிழர் கடவுள் என்பார்கள். அதற்குத் திணையும் இல்லை, பாலுமில்லை'' என்றார் ஒரு தமிழ் நாவலர், நாஸ்திகருக்கு.

''இங்கே நாம் வாதித்துக் கூச்சல் போடலாகாது. கடற்கரைக்குப் போய்ப் பேசுவோம்'' என்றார் நாஸ்திகர்.

''இதை ஒரு கதையாகக் குழந்தைகளுக்குச் சொல்லும்'' என்றார் விநாயகர்.

''குழந்தைகளுக்குப் புரியுமா?'' என்றேன்.

''பெரியவர்களுக்குத்தான் புரியாது. குழந்தைகளுக்குப் புரியும்'' என்றார் கணேசர்.

''சரி'' என்றேன்.

**சென்னை அகில இந்திய ரேடியோ, ஜனவரி 7ம் தேதியிலிருந்து வாரமொருமுறை குழந்தைகளுக்கான 'சிறுவர் சோலை' நிகழ்ச்சியில் ராஜாஜியின் குழந்தைகளுக்கான கதைகளை அவரது குரலிலேயே ஒலிபரப்பி அஞ்சலி செலுத்துகிறது. இந்த நிகழ்ச்சியை 416.7 மீட்டரில் மத்தியானம் 2-10 மணிக்குக் கேட்கலாம்.**









(ஸ்தாபிதம்: 1947)

# பாலுஸேரி பெனிபிட் சிட் பண்டு பிரைவேட் லிமிடெட்

"வீணு விகார்" — 17-A, :பிளாங் ரோடு,
ஷண்முகானந்தா ஹாலுக்கு அருகில்
சயான் (கிழக்கு) பம்பாய்-22. D. D.
டெலிபோன்: 471455
தபால் பெட்டி 6759 : : தந்தி: "GROWRICH"

**எங்கள் சந்தாதார்கள் அனைவருக்கும் புத்தாண்டு வாழ்த்துக்கள்**

ஏலம் கேட்ட பிறகு டிவிடெண்ட் அடையும் வசதியுள்ள இழ்க்கண்ட

**ஜனவரி 1973 புதிய குருப்புகள்**

**குறுகிய காலம்**
25 மாதங்கள் - 25 அங்கத்தினர்கள்
முதல் ஏலத் தேதி: 14-1-73

| வகுப்பு | மாதச் சந்தா ரூ. | சிட்டுத் தொகை ரூ. |
|---|---|---|
| B | 100/- | 2 500/- |
| C | 50/- | 1,250/- |
| F | 25/- | 625/- |
| G | 20/- | 500/- |

**நீண்ட காலம்**
40 மாதங்கள் - 40 அங்கத்தினர்கள்
முதல் ஏலத் தேதி: 28-1-73

| வகுப்பு | மாதச் சந்தா ரூ. | சிட்டுத் தொகை ரூ. |
|---|---|---|
| LTE | 500/- | 20,000/- |
| LTF | 250/- | 10,000/- |
| முதல் ஏலத் தேதி 21-1-73 | | |
| LTG | 125/- | 5,000/- |
| LTM | 50/- | 2,000/- |

*வேலை நேரம்: காலை 8 மணி முதல் 10-30 வரை; மாலை 4 மணி முதல் 7-30 வரை*
வார விடுமுறை: திங்கட்கிழமை

தலைமை அலுவலகம் & பதிவு செய்யப்பட்ட அலுவலகம்
**"பாலுஸேரி பில்டிங்ஸ்"**
3, சிங்கராச்சாரி தெரு. திருவல்லிக்கேணி
தபால் பெட்டி: 414 :: சென்னை - 5
கிளைகள்: பெங்களூர் — கல்கத்தா — புது டெல்லி — கோயம்புத்தூர்
இலவசப் பிரசுரத்திற்கு எழுதுங்கள்
சிட்டுகள் ஒதுக்குதல் கம்பெனியின் உரிமையைப் பொறுத்தது




**எங்கள் சேவை உங்களுக்குத்தேவை**

# உலக மேதைக்கு அஞ்சலி

அன்புள்ள ஸ்ரீ சதாசிவம் அவர்களுக்கு,

ராஜாஜியின் மறைவு தங்களுக்கும் தங்கள் மனைவியாருக்கும் தாங்க முடியாத துக்கத்தை அளித்திருக்கிறது. இந்தத் துக்கத்தை நாங்கள் எல்லோரும் பகிர்ந்து கொள்ளு கிறோம் என்ற ஆறுதலைத்தான் நான் தங்களுக் குக் கூற முடியும். ராஜாஜி அவர்கள் இத்தனை வருஷங்கள் வாழ்ந்திருந்த போதிலும் அவர் நம்மை விட்டு மறைந்தது உண்மையில் ஓர் ஈடுசெய்ய முடியாத விபத்தாகும். தங்களுக்கு என் ஆழ்ந்த அனுதாபத்தைத் தெரிவித்துக் கொள்ளுகின்றேன். கடைசி முறையாக ஸ்ரீ ராஜாஜி அவர்களைத் தரிசிக்கும் பாக்கியம் கூட எனக்குக் கிட்டவில்லை.

சென்னை—4
25—12—72 எம். பக்தவத்ஸலம்

இன்று பாரத மகரிஷி, ஞானத் தந்தை, அரும் பெரும் அரச ஞானி, ராஜாஜி அவர் களின் மறைவு கண்டு பெருந் துயரம் அடைந்தேன்.

மதுரை அன்பன்
25—12—72 கிருபானந்தவாரி

மதிப்புக்குரிய ராஜாஜியின் மறைவைக் குறித்து என் தாயாரும் நானும் தங்களுக்கும் தங்கள் மனைவியாருக்கும் எங்கள் வருத்தத் தையும் அனுதாபத்தையும் தெரிவித்துக் கொள்கிறோம்.

அவர்பால் தாங்கள் கொண்டிருந்த பரிவும் பாசமும் கொஞ்ச நஞ்சமல்ல. எவ் வளவு பக்தி சிரத்தையுடன் நீங்கள் இருவரும் இத்தனை ஆண்டுகள் பணிவிடை புரிந்து வந் தீர்கள். அவர் பூத உடலில் நம்மிடை இல்லாமல் இருக்கலாம். ஆனல் அவரது பரி பூரண ஆசிகள் தங்களுக்கு என்றென்றும் உண்டு.

ராஜாஜியின் மறைவினல் என் தாயாரும் நானும் எங்கள் நலனில் அக்கறை கொண்ட ஒரு பெரிய நண்பரை இழந்துவிட்டோம் என் பதை நான் சொல்லாமலே நீங்கள் அறி வீர்கள். அவர் எங்களிடம் கொண்டிருந்த நட்புக்கும் மதிப்புக்கும் நாங்கள் எத்தனையோ குறிப்புக்கள் பெற்றுள்ளோம் !

தங்களுக்கும் ஸ்ரீமதி சதாசிவத்துக்கும் அன்பும் மதிப்பும்.

ராமாலயம் ராமவர்மா
சென்னை-20 ஸ்ரீ பத்மநாப தாஸா

உலகமே துயரத்தில் ஆழ்ந்திருக்கிறது. இறைவனிடமிருந்து ஆறுதல் கோருவது தவிர்த்து நாம் வேறு ஒன்றும் செய்வதற் கில்லை.

கடைசி நாட்களில் கவலையுடன் விழித் திருந்து பணியாற்றியது மிகவும் வேதனையாக வும் துயரமாகவும் இருந்திருக்கும். ஆனல் அதனை இப்பொழுது பின்னேக்கிப் பார்த் தால் மனத்துக்கு இதமாகவும், களக்குவிப்ப தாகவும் சிலிர்ப்பு மூட்டுவதாகவும் இருக்கும். ஏனெனில், இறந்தவர் இறைவனே. ஆத்மா மெல்ல மெல்ல பரமாத்மாவுக்குள் ஒடுங்கும் பணியே நடந்துள்ளது. தேசம், ஏன் உலகமே உங்களுக்கும் உங்கள் குடும்பத்தாருக்கும் ராஜாஜியின் குடும்பத்தாருக்கும் நன்றி செலுத்துகிறது. இறந்த மகானிடம் தாங்கள் கொண்டிருந்த எல்லையற்ற அன்பும், மதிப்பும் பரிவும் கொஞ்சமல்ல என்பதால். உங்கள் துயரத்தில் நாங்கள் அனைவருமே பங்கு கொள் கிறோம் என்பதில் உங்கள் துயரத்தின் கடுமை சற்றுக் குறையலாம்.

மயிலாப்பூர்
26—12—72 கே.ஆர். சீனிவாச அய்யங்கார்

நல்லதைச் சொல்லப் பயப்படுகிறவன் அரசியல்வாதி. எங்கு வோட்டு போய்விடுமோ என்ற அச்சம். தீய ஒழுக்கத்தைக் 'கண்டும் காணுமல் ஒதுங்குகிறவன் மதவாதி. எங்கு தன் சமயம் தனக்குள்ள புகழைத் தட்டிப் பறித்துவிடுமோ என்ற பயம். பிறர் துயர் பார்த்து விலகுகிறவன் செல்வ (அதி)பதி. எங்கு நம் காசு செலவு வழி ஓடிவிடுமோ என்ற புத்தி சிக்கனம்!

ஆனல் ராஜாஜி நல்லதைச் சொல்லி, ஒழுக்கமாக நடந்து, பிறர் துயர் துடைத்த யோக புருஷன்.

எனக்கு அவரைப் பல்லாண்டுகளாகத் தெரி யும். நெருங்கிய பழக்கம்.

ஆம் ! அவரை வாரம் தவருமல் இரண்டு முறை சந்திப்பேன். கல்கியிலும் சுயராஜ்யா விலும்!

உங்களுக்கு அவரோடு உள்ள நெஞ்சுறவு எனக்குத் தெரியும். எட்டியிருந்து பார்த்து ரசித்தவனேயானுலும் எதையோ இழந்து விட்ட உணர்வு என்னைச் சுற்றி அலைகிறது.

ஆனல் அருகிலேயே இருந்து ருசித்த உங்க ளுக்கு..... என்னல் உணர முடிகிறது ஐயா, என்னல் உணர முடிகிறது.

தொடர்ந்து ''ராஜ முனியின்'' சேவையை நிலைநாட்ட இறைவன் தங்களுக்கு வளம் ஊட்டுவானாக.

பூண்டி அன்பு
27-12-72 கி.துளசிஐயா வாண்டையார்

சத்துள்ள பழுத்தபழம் ஒன்று உதிர்ந்தது. இது ஓர் அதிசயமான சுவைமிக்க பழம். இதை நாம் எல்லோருமே உண்ணலாம், அதன் சாற்றை அருந்தலாம். நமது மனம் திருப்தி அடையும் வரை சாப்பிட்டாலும் பழம் முழுமையாகவே இருக்கும். நமது வருங்காலச் சந்ததிகளுக்கு ஆரோக்கிய உண வாகப் பயன்படும்.

ஒரு நூற்றண்டு முழுவதும் படர்ந்திருந்த ராஜாஜியின் ஜாஜ்வல்யமான வாழ்க்கை ஸோக்ரதரின் பொன்மொழிகளைப் போன்று நாட்டு நடப்பைத் தாக்கிச் செப்பனிட்டது. அவரது ஆயிரக்கணக்கான ஏகலைவர்களில் ஒருவனான நான் ஒரு யோசனை கூற விரும்பு கிறேன். நமது நாட்டிலுள்ள ஒவ்வோர்

ஊரிலும் மக்கள் தங்களுக்கிடையிலிருந்து ஒரு 'ராஜாஜி'யைத் தேர்ந்தெடுத்து அவர் உதவியுடன் ராஜாஜியின் எழுத்துக்கள் அனைத்தையும் ஆழ்ந்து படித்துப் பரவச் செய்ய வேண்டும். ராஜாஜியை நாம் இழக்கவில்லை. அவரது எழுத்துக்களில் அவர் அரியதொரு பொக்கிஷமாக இன்றும் நம்மிடை திகழ்கிறார்.

திருவான்மியூர்
26–12–72

தேவிதாஸா

மகாமேதை மறைந்துவிட்டார். அவருடன் பழகின அனைவரும் அளவில்லாத துக்கப்படுவார்கள். அவரை ராகவனாக எண்ணி அநுமானைப் போல் பயபக்தியோடு தொண்டு புரிவதையே பெரும் பேருகக் கொண்டிருந்த எனக்கு உண்டாகும் அதிர்ச்சியைத் தாங்கும் ஆற்றலை ஆண்டவன் அருள வேண்டும் என்பது நான் செய்யும் பிரார்த்தனை ஆகும். நீண்ட காலம் ஆயுளோடு இருக்கும் தண்டனையைத் தான் அனுபவிக்க வேண்டி இருக்கிறதே என்று கூறிய அச்சிரேஷ்டரின் ஆத்மாவுக்கு முக்தி கிடைத்துவிட்டது. அதை நினைவுபடுத்திக் கொண்டு ஆறுதல் அடைய வேண்டும்.

புதுதில்லி — 1
26–12–72

கப்ரி

சக்கரவர்த்தி ராஜகோபாலாச்சாரியார் அவர்கள் காலமான செய்தி ரேடியோவில் அறிவிக்கப்பட்டதும் கல்கத்தா நகர் துயரில் மூழ்கியது. நிசப்தமாக மக்கள் ஆங்காங்கே நின்று அவருக்கு அளிக்கப்பட்ட பாராட்டுக்களைக் கனத்த உள்ளத்துடன் கேட்டனர். மேற்கு வங்கத்தின் முன்னாள் முதல்வர்கள், சரித்திர ஆசிரியர்கள், சர்வோதயத் தலைவர்கள் முதலானோர் பேசினர். கடைசியாக மேஜர் ஜெனரல் சாட்டர்ஜி பேசினார். இவர், ராஜாஜி மேற்கு வங்க கவர்னராக இருந்த போதும் கவர்னர் ஜெனரலாக இருந்த போதும் அவரிடம் ராணுவக் காரியதரிசியாக ஆயிரம் நாட்களுக்கு மேல் பணியாற்றியவர். ராஜாஜிக்குள்ள பலப் பல குண நலன்களை சாட்டர்ஜி விவரித்துவிட்டு, 'முக்கியமாக மூன்று குணங்களால்தான் அவர் உலக முழுமையும் புகழ் பெற்றார்' என்றார். நல்லொழுக்கம், நகைச்சுவை உணர்ச்சி, இறைப்பற்று ஆகியனவே அம்மூன்றும். 'உங்கள் சுயசரிதையை ஏன் எழுதக் கூடாது?' என்று கேட்கப்பட்ட போது 'நான் என்ன செய்துள்ளேன் என்பதை மற்றவர்கள்தான் சொல்ல வேண்டும்' என்று ராஜாஜி கூறியதை நினைவு கூர்ந்தார். 'வேட்டி சட்டை அணிந்த கவர்னர் ஜெனரல் எளிய வாழ்க்கையும், உயர்ந்த சிந்தனையும் கொண்ட கர்மயோகியாக விளங்கினார்' என்றார் சாட்டர்ஜி.

கல்கத்தா — 26
26–12–72

ஆர். சீதா

மதிப்புக்குரிய ராஜாஜி நம்மிடை இல்லை. அவர் நாட்டுக்காகச் செய்த தியாகமும் தொண்டுகளும் நீடு வாழ்க.

''கிருஷ்ணனை, கிருஷ்ணன் மட்டுமே முழுமையாக அறிவான். ஆனால் காண்டீபம் ஏந்திய அர்ஜுனன் ஓரளவு அறிவான்'' என்பதாக ஒரு பழமொழி உண்டு.

அதைப்போல், ''ராஜாஜியை ராஜாஜியே முழுமையாக அறிவார். ஆனால் உண்மைப் பக்தரான சதாசிவம் ஓரளவு அறிவார்'' என்று நான் கூறலாமா?

ராஜாஜி எடுத்த எல்லாப் பணிகளிலும் தாங்களும் தங்கள் மனைவியார் கோகிலகான எம்.எஸ்ஸும் தொடர்ந்து துணை நின்று உதவியது, நாட்டிலுள்ள லட்சோப லட்சம் மக்களின் நினைவில் என்றும் பசுமையாக இருக்கும்.

சென்னை — 3
27–12–72

டி. ஜி. ராமனுஜலு

அலை ஓசை சுதேசமித்திரன்

தினமணி

தென்னகம்

தினமலர் முரசொலி

பத்திரிகைத் தலைப்புக்கள் சில :

மறைந்த மாமேதை — அலைஓசை
அரசியல் ஞானி இராஜாஜி
அமரரானர் — சுதேசமித்திரன்
மாமலை சாய்ந்தது — தினமணி
அறிவுத் தீபம் அணைந்தது
உலகப் பேரொளி மறைந்தது
— தினமலர் (நெல்லை)
எங்கும் துயர வெள்ளம்;
கண்ணீர் — தென்னகம்
அறிவுச் சுடரொளி
ஆன்மீக மேதை — நவசக்தி
மறைவு எய்திய மூதறிஞர்
தீபஸ்தம்பம் சாய்ந்தது — முரசொலி



பாரதப் பிரதமர் நேருஜியுடன் சேர்ந்திருப்பதுபோல் உள்ள பல புகைப்படங்களுள் ராஜாஜிக்கு மிகவும் பிரிய மான படம் இதுதான்.

இரும்பு மனிதர் படேலும், மதியூகி ராஜாஜியும்.

ஜின்னாவும் ராஜாஜியும்.







## நேசம்மிக்க நெஞ்சம்

பண்டித பந்துடன் அறிவுச் செம்மல். இடதுபுறம் பாபு ராஜேந்திரப் பிரசாத்தும் ஜம்னாலால் பஜாஜும்.

இடமிருந்து வலமாக: எல்லைப்புற காந்தி, ராஜாஜி, தீனபந்து ஆண்ட்ரூஸ், புலாபாய் தேசாய், ஜெயராம்தாஸ் தௌலத்ராம், சங்கரராவ் தேவ்.

ராஷ்டிரபதி ராதாகிருஷ்ணனும் முன்னாள் கவர்னர் ஜெனரலும்.












பாரதப் பிரதமர் லால்பகாதூரும், பாரத ரத்தினமும்.
இந்திய ராஷ்டிரபதி ஜாகிர் ஹுசைனும் அரும் தலைவர் ராஜாஜியும்.
குருவும் சீடரும் -- பேராசிரியர் கல்கியுடன்.
தீரர் சத்தியமூர்த்தியுடன்.
ம. பொ. சியும், ராஜாஜியும்.
ரசிகமணியுடன் ராஜாஜி.
கருத்தால் வேறுபட்டாலும் நட்பால் ஒன்றுபட்டவர்கள்.










வாடிகன் நகரில் புனித போப் பாண்டவருடன் ராஜ ரிஷி ராஜாஜி.

அமெரிக்காவில் அணு விஞ்ஞானி டாக்டர் ஓப்பன்ஹீமருடன் அணு ஆயுதங்களை எதிர்த்துப் போராடிய வீரர்.

அமெரிக்க ஜனாதிபதி கென்னடிக்குக் காந்தி சமாதான நிறுவனம் சார்பில் தலைவர் ராஜாஜி அணு ஆயுதங்களைப் பகிஷ்கரிக்குமாறு அறிவுறுத்துகிறார்.

ஸ்ரீமதி விஜயலக்ஷ்மி பண்டிட்டை ராஜாஜி வரவேற்கிறார்.

அன்று உதவி ஜனாதிபதியாக இருந்த நிக்ஸன் சென்னையில் ராஜாஜியைச் சந்தித்து உரையாடுகிறார்.

தளபதி கரியப்பாவுடன் ராஜாஜி.













பாரதப் பிரதமர் இந்திராகாந்தியும் சவானும் ராஜாஜியோடு பேசி மகிழ்கிறார்கள்.

தமிழக கவர்னராக இருந்த மைசூர் மகாராஜா ஜெயசாமராஜ உடையார் கல்கி காரியாலயத்தில் ராஜாஜியைச் சந்தித்து அளவளாவுகிறார். அருகே 'ஸ்வராஜ்யா' ஆசிரியர் திரு காசா சுப்பாராவ்.

தமிழகத் தலைவர்களான காமராஜ், டி.டி.கிருஷ்ணமாசாரியார், ராஜாஜி.

கல்கி ஆசிரியர் ஸ்ரீ சதாசிவம் அவர்களுடன்.

அண்ணாதுரை: காயிதே மில்லத் இஸ்மாயில் ஆகியோரோடு தலைவர் ராஜாஜி.

உபன்யாசச் சக்கரவர்த்தியுடன் சக்கரவர்த்தி ராஜகோபாலாச்சாரியார்.





















ALBO-SANG
FOR POORLY AND
IMPROPERLY NOURISHED
BABIES AND ADULTS

திரையுலகம் பெருமையோடு தரும் ஒருசில படங்களிலே ராஜஸ்ரீ புரொடக்ஷன்ஸார் அளித்திருக்கும் **பியா கா கர்** படமும் ஒன்றாகும்.

கதைக் கரு ஒன்றும் புதிதல்ல. ஃபாமிலி லே, தஸ்தக் போன்ற படங்கள் இதற்கு முன்னோடியாக அமைந்துள்ளன. பம்பாய் போன்ற மாநகரங்களிலே, ஓர் அறைக் குடித்தனம் நடத்தும் இளம் தம்பதிகளின் சிரமங்களை வெவ்வேறு சூழலில் அவை படம் பிடித்துக் காட்டியுள்ளன. 'கணவன் வீடு' என்னும் பொருள் தரும் இப்படமும் அதே போன்றதொரு சூழலில் உருவாகியுள்ளது. வழுக்கு மரத்தில் கடைசியில் ஏறுபவன் பலனை அடைவது போல, இப்படம் வெற்றி வாகை சூடியுள்ளது.

இந்த வெற்றிக்கு ஒரு நபர் நடிப்பே உயிர் ஊட்டியுள்ளது. அந்த ஒரு நபர் ஜயாபாதுடி தான். அனில் தவன் அவருடன் ஒத்துழைத்ததனால் பெருமையுறுகிறார்.






எளிமையும் எழிலும் கூடிய கிராமப் பெண்ணாகத் தோன்றும் ஜயாபாதுடி பெண்ணுக்கு இயல்பான நாணத்தைத் தம் நடிப்பில் இழைய விட்டே ரசிகர்களின் கண்களில் நிலையான இடம் பெற்று விடுகிறார். பம்பாய்ப் பையனை மணந்து ஓர் அறைக் குடும்பங்கள் பல வாழும் பாரத் மகல் என்னும் விடுதிக்கு வருகிறாள், இதயத்தில் இனிய இளமைக் கனவுகளைத் தேக்கி இன்பம் காண விழையும் ஆர்வத்தில். அப்பா—அம்மா, அண்ணன் — அண்ணி, தம்பி என்று இத்தனை பேருக்கும் நடுவில் இளந் தம்பதிகள் எப்படிக் கூடி இன்பம் அனுபவிக்க முடியும்? இலை மறைவு, காய் மறைவு என்பது போலவாவது இடம் வேண்டாமா? அது கிட்டாமல் அவர்கள் தவிக்கும் தவிப்பை, அவர்களுக்கு ஏற்படும் ஆசாபங்கங்களைத் திறன்படப் படமாக்கியிருக்கிறார்கள்! ஜயாபாதுடியின் நடிப்பு ஒவ்வொரு கட்டத்திலும் பளிச்சிடுகிறது. வெட்கத்தில் நாணிக் கோணும்பொழுது, கணவனது இக்கட்டான உணர்வு நிலைகளைக் கண்டு ஓசையில்லாக் 'குபுக்' சிரிப்புச் சிரிக்கும்போது பார்ப்பவர்களை இன்பத்தின் இறுதி நிலைக்கே இட்டுச் சென்று வியப்பில் ஆழ்த்திவிடுகிறார்! இத்தனைக்கும் விரசம் எங்குமே தலை காட்டவில்லை.

ஆடைக் குறைப்புக்குச் சவுக்கடி கொடுக்கிறாற்போன்ற எள்ளி நகையாடும் வசனம் கூட எழில் கூட்டுகிறது.

ஆகா, முக்ரி போன்ற நடிகர்கள் தம் சேஷ்டைகளை மறந்து பாத்திரம் அறிந்து நடித்துப் படத்துக்குப் பெருமை சேர்க்கிறார்கள். நாடக நடிகனாக வரும் பைந்தாலின் நடிப்பு பாவர்ச்சியைப் போலச் சோபிக்கவில்லை!

இசையில்கூட ஒரு திருப்பம். இரண்டு டூயட், நாலு டான்ஸ் என்று சூழ்நிலைக்குச் சூழ்நிலை தாவி ஓடாமல் தேவைக்கு ஏற்பத் தரப்பட்டிருக்கிறது. லக்ஷ்மி காந்த் ப்யாரே லாலின் இசை அமைப்பு இனிய விருந்தாகிறது.

ரசத்தைக் கூட்டுவதாக எண்ணிக்கொண்டு, விரசம் கூட்டும் நியூ வேவுக்குச் சரியான சூடுதான், பாஸு சாட்டர்ஜியின் டைரக்ஷனில் உருவாகியிருக்கும் **பியா கா கர்.**

—ரா. வீ.



தாய் போதிப்பது தத்துவம்.
தந்தை பேசுவது பழம்பெருமை.
இளைய பருவத்தினர் அலசுவது புதுமை.
ஆயினும் எல்லோரின் ஒருமித்த
கருத்து ஸிஸிஎம் பெருமை.

# ஒருமித்த கருத்து!

நியூ மிர்ராபோ • லவ்லின் • எவகுன்ஸா
ஸ்டேலாங்கர் • ஸ்ட்ரேஞ்சர்

ஸிஸிஎம் தயாரிப்புகள்:
நியூ மிர்ராபோ :.புல்
வாயில் புடவைகள் •
ஸ்டேலாங்கர்,
ஸ்ட்ரேஞ்சர்
ஷர்ட்டிங்குகள் •
எவகுன்ஸா சூட்டிங் •
லவ்லின் ஷர்ட்டிங் •
சில்வர்லேன், சில்வர்,
கிங் வேஷ்டிகள் •
மல் • காடா.

உங்கள் குடும்ப நண்பன்...CCM



## தி கோயம்பத்தூர் காட்டன் மில்ஸ் லிமிடெட்

மார்க்கெட்
செய்பவர்கள்:
வெங்கடேஷ்
வஸ்திராலயா

# 25. லலிதாவின் கடிதம்

**கா**லை நேரத்தில் அரை மணி நேரம் சடசடவென்று பெய்த மழையினால் கல்கத்தாவின் வீதிகள் சுத்தமாக விளங்கின. வீதி ஓரங்களில் வளர்ந்திருந்த செழுமையான மரங்களிலிருந்து மழைத் துளிகள் முத்து முத்தாகச் சொட்டிக் கொண்டிருந்தன. பட்சிகள் சிறகுகளை அடித்து மழைத்துளிகளை உதறிக்கொண்டிருந்தன.

மேல் மாடியின் பலகணி மாடத்தில் உட்கார்ந்து சித்ரா அந்தக் காட்சியைப் பார்த்துக் கொண்டிருந்தாள்.

அவளுடைய கணவன் அமரநாத் ஆபீஸுக்குப் போவதற்காக உடுப்புத் தரித்துக் கொண்டிருந்தான்.

''இன்றைக்குச் சீக்கிரம் ஆபீஸிலிருந்து வந்துவிடுவீர்களா? மழை பெய்திருக்கிறபடியால் ஏரிக் கரை இன்று ரொம்ப சுகமாயிருக்கும். சீக்கிரம் வந்தால் போகலாம்'' என்றாள் சித்ரா.




''சரிதான், சரிதான்! அன்றைக்கு ஒரு நாள் ஏரிக் கரைக்குப் போனதுபோதாதா? அன்றிலிருந்து ஏரி என்றாலே எனக்குப் பயமாயிருக்கிறது. திரும்பி வரும்போது பஞ்சத்தில் அடிபட்ட இன்னும் ஒரு பெண்மணியாரையாவது காப்பாற்ற வேண்டி நேரிட்டால்? அதைக் காட்டிலும் ஏதாவது நல்ல சினிமாவுக்குப் போய்விட்டு வந்தாலும் வரலாம். 'அன்னா கரீனா' வந்திருக்கிறதாம்!....''

''புருஷர்களுடைய காரியமே விசித்திரமாயிருக்கிறது. நாடகத்திலும் சினிமாவிலும் யாராவது ஓர் அநாதைப் பெண் வீதியிலே கிடந்தால் அதைப் பார்த்து உருகிப் போய்விடுகிறார்கள். நிஜ வாழ்க்கையில் அந்த மாதிரி ஒரு பெண் கிடந்தால், அந்தப் பக்கமே பார்க்காமல் வேறு பக்கம் முகத்தைத் திருப்பிக் கொள்கிறார்கள்...''

''அது உண்மைதான். யார் இல்லை என்கிறார்கள். அதற்குக் காரணமும் இருக்கிறது. சினிமாவில் ஒரு பெண் தெருவில் கிடந்தாள் என்றால், அவள் சாமான்யப் பெண்ணாயிருப்பாளா? ஒரு கிரேடா கார்போ, அல்லது நார்மா ஷியரர் அல்லது கண்ணன்பாலா அவ்விதம் விழுந்து கிடப்பாள். பார்க்கிறவர்களுடைய மனம் கட்டாயம் உருகத்தான் செய்யும்...''

''கொஞ்சம் நில்லுங்கள், மிஸ்டர்! அன்றைக்குத் தாங்கள் பெரிய மனசு செய்து காரிலே தூக்கிப் போட்டுக் கொண்டு போய்க் காப்பாற்றினீர்களே, அந்தப் பெண் உங்கள் கிரேடா கார்போ அல்லது உங்கள் கண்ணன் பாலாவுக்கு எந்த விதத்திலும் குறைந்தவள் அல்ல! நான் ஒன்று சொல்கிறேன், கேளுங்கள்! இன்று சாயங்காலம் ஆபீஸிலிருந்து சீக்கிரம் வந்துவிடுங்கள்! இரண்டு பேருமாகப் போய் அந்தப் பெண்ணையும் அழைத்துக் கொண்டு ஏரிக் கரைக்குப் போவோம். கல்கத்தா நகரத்தைச் சுற்றிக் காட்டுவதாக அவளிடம் சொல்லியிருக்கிறேன். அவளும் வருவதாக ஒத்துக் கொண்டிருக்கிறாள்'' என்றாள் சித்ரா.

''முடியவே முடியாது! அந்த மாதிரி நீ செய்வதாயிருந்தால் நான் ஆபீஸிலிருந்து இராத்திரி பத்து மணிக்குத்தான் திரும்பி வருவேன். நம்முடைய திருநெல்வேலிப் பக்கங்களில் 'விருதுப்பட்டிக்குப் போகிற சனியனை விலைக்கு வாங்கினாற்போல்' என்பார்கள். அம்மாதிரியல்லவா இருக்கிறது நீ சொல்லுகிற காரியம்?''

''ஊர் பேர் தெரியாத ஓர் அநாதைப் பெண்ணிடம் உங்களுக்கு என்னத்துக்காக இவ்வளவு கொடூரம்?'' என்று கேட்டாள் சித்ரா.

"ஊர் பேர் தெரியாததினால்தான் நாம் ஜாக்கிரதையாக இருக்க வேண்டும். அவள் யோக்கியமான ஸ்திரீயாயிருக்கும் பட்சத்தில் ஊர் பேர் சொல்வதற்கு ஏன் தயங்க வேண்டும்? இன்னும் சொல்லாமல்தானே இருக்கிறாள்?" என்றான் அமரநாத்.

"அதனால் என்ன? எத்தனையோ காரணம் இருக்கலாம். ரொம்பவும் துக்கப் பட்டவளாகத் தெரிகிறது. அவளுடைய யோக்கியதையைப் பற்றி எந்தக் கோர்ட்டில் வேண்டுமானாலும் நான் சத்தியம் செய்யத் தயாராயிருக்கிறேன். அநாதை விடுதியின் தலைவி சௌதாராணி அம்மாள் இந்தப் பெண்ணைப் பற்றிச் சொல்கிற புகழ்ச்சிக்கு அளவேயில்லை. தினம் ஐம்பது அநாதைக் குழந்தைகளைக் குளிப்பாட்டி விடுகிறாளாம்! அலுக்காமல் சலிக்காமல் வேலை செய்து கொண்டிருக்கிறாளாம். அவள் இங்கேயே இருந்து விட்டால் எவ்வளவோ தனக்கு உதவியாக இருக்கும் என்று சௌதாராணி அம்மாள் சொல்லுகிறாள்."

"அவ்வளவு நல்ல பெண்ணாயிருக்கும் பட்சத்தில் ஊர், பேர் சொல்ல எதற்காக மறுக்க வேண்டும்?" என்று அமரநாத் மீண்டும் வற்புறுத்திக் கேட்டான்.

"யார் கண்டது? அவளுடைய கணவன் உங்களைப் போன்ற கொடூர குணம் உள்ளவனாயிருக்கலாம்! இவளை அடித்துத் துரத்தியிருக்கலாம்! அதைச் சொல்லிக் கொள்ள இவள் வெட்கப்படலாம்!"

"சரி, சரி! உன்னை நான் ஒரு நாளைக்கு வீட்டை விட்டு அடித்துத் துரத்துகிறேனா, இல்லையா பார்!" என்றான் அமரநாத்.

"நீங்கள் அப்படிச் செய்தால் நான் இந்தச் சாதுப் பெண்ணைப் போல் வாயை மூடிக் கொண்டிருப்பேன் என்று நினைக்க வேண்டாம்! என்னை அடித்துத் துரத்திய அருமைக் கணவன் யார் என்பதை ஊரெல்லாம் பறையடித்து விடுவேன்!" என்றாள் சித்ரா.

இந்தச் சமயத்தில் வேலைக்காரப் பையன் அன்றையத் தபால்களைக் கொண்டு வந்து கொடுத்தான். அமரநாத் முதலில் தபால்களைப் புரட்டிப் பார்த்து, "ஸ்ரீமதி சித்ரா தேவிக்கு ஒரு கடிதம் இருக்கிறது. லலிதா தேவி எழுதியதாகத் தோன்றுகிறது!" என்று சொல்லிக் கொண்டே ஒரு கடிதத்தை எடுத்துக் கொடுத்தான். பிறகு தன் தபால்களைப் படிக்கத் தொடங்கினான்.

சித்ரா தனக்கு வந்த கடிதத்தை எடுத்துக்கொண்டு தன்னுடைய அறைக்குப் படிப்பதற்குப் போனாள். ஐந்து நிமிஷங்களுக்கெல்லாம் "கேட்டீர்களா கதையை?" என்று கூவிக் கொண்டே ஓடி வந்தாள்.

அமரநாத் நிமிர்ந்து சித்ராவைப் பார்த்துவிட்டு, "கதை பரபரப்புள்ள, மர்மம் நிறைந்த, திடுக்கிடும் கதையாக இருக்கும் போலிருக்கிறதே? அப்படிப்பட்ட கதையை யார் எழுதியிருக்கிறது? லலிதாவா?" என்றான்.

"ஆமாம்; லலிதாவேதான். ஆனால் இதில் அவள் எழுதியிருப்பது வெறும் கதையல்ல. கதையைக் காட்டிலும் திடுக்கிடச் செய்யும் உண்மைச் சம்பவம்.



இதைப் படித்துப் பாருங்கள்!'' என்று கடிதத்தை நீட்டினாள்.

''அதெல்லாம் முடியாது. உனக்கு வந்த கடிதத்தை நான் படிக்க மாட்டேன். அப்புறம் எனக்கு வரும் கடிதங்களை நீ படிக்க வேண்டும் என்பாய். ஏதாவது விசேஷ சமாசாரம் இருந்தால் வாயினால் சொல்லிவிடு!'' என்றான் அமரநாத்.

''உங்களை மாதிரி பிடிவாதம் உள்ள மனுஷரை நான் பார்த்ததே கிடையாது. போனால் போகட்டும்! நான் சொல்வதையாவது கேளுங்கள். லலிதாவின் அண்ணன் சூரியா, டில்லியில் போலீஸாரிடமிருந்து தப்பி ஓடப் பார்த்தானாம். போலீஸார் அவனைச் சூழ்ந்து கொள்ளவே துப்பாக்கியால் சுட்டானாம். ஆனால் போலீஸ்காரர்கள் அவனைப் பிடித்து விட்டார்களாம். அதனால் பலத்த காயம் பட்டு ஆபத்தான நிலைமையில் இருக்கிறானாம். இதைப் பற்றி லலிதா ரொம்பவும் வருத்தப்பட்டு எழுதியிருக்கிறாள். அவளுடைய அப்பாவும் அம்மாவும் ரொம்ப வருத்தப்படுகிறார்களாம். வருத்தம் இராதா, பின்னே? இது போதாதற்கு இன்னொரு பெரிய விபத்து அவர்களுக்கு! அதுவும் டில்லி சமாசாரம்தான். சீதாவைத் திடீரென்று ஒரு நாள் காணோமாம். எவ்விதத் தகவலும் சொல்லாமல் மாயமாய் மறைந்து போய் விட்டாளாம். சூரியா பிடிபட்டதும் சீதா காணாமற் போனதும் ஒரே நாளில் நடந்ததாம். சீதாவின் கணவன் லலிதாவின் தகப்பனருக்கு அதைப் பற்றி எழுதியிருக்கிறானாம். ஒருவேளை தேவப்பட்டணத்துக்கோ ராஜம்பேட்டைக்கோ வந்து சேர்ந்தால் தனக்கு உடனே தகவல் தெரிவிக்கும்படி எழுதியிருக்கிறானாம். சூரியாவுக்கு நேர்ந்த விபத்தைக் காட்டிலும் சீதாவைப் பற்றிய செய்திதான் லலிதாவை அதிகமாகத் துன்பப்படுத்தியிருக்கிறது. அதைப் பற்றி ரொம்பவும் புலம்பியிருக்கிறாள்!''

இதைக் கேட்டுக் கொண்டு வந்த அமரநாத் நடுவில் பெரும் யோசனையில் ஆழ்ந்துவிட்டான். திடீரென்று குதித்து எழுந்து, ''சித்ரா! நாலு நாளைக்கு முன்பு டில்லி சமாசாரம் ஒன்று பத்திரிகையில் வந்ததே; உனக்குப் படித்ததாக ஞாபகம் இருக்கிறதா?'' என்று சொல்லிக் கொண்டே தினசரிப் பத்திரிகைகள் அடுக்கி வைத்திருந்த மூலைக்குப் போய் அங்கிருந்த பத்திரிகைகளைப் புரட்டத் தொடங்கினான். சில நிமிஷ நேரத்துக்குள் அவன் தேடிய பத்திரிகைச் செய்தி அகப்பட்டு விட்டது.

''ஆகா! இதோ அந்தச் செய்தி இருக்கிறது! கேள், சித்ரா!'' என்று செய்தியைப் படித்தான்.

''நாலு நாளைக்குமுன் சூரியநாராயணன் என்னும் புரட்சிக்காரன் போலீஸாரால் கைது செய்யப்பட்ட செய்தி இந்தப் பத்திரிகையில் பிரசுரிக்கப்பட்டிருந்தது. கைது செய்யப்பட்டபோது மேற்படி புரட்சிக்காரன் போலீஸாரை எதிர்த்ததன் காரணமாகப் பலமாக அடிக்கப்பட்டுக் காயம் அடைந்தான். இது காரணமாக அவனை ஆஸ்பத்திரியில் சிகிச்சை பெறுவதற்காகச் சேர்த்துப் போலீஸ் காவலும் போடப்பட்டிருந்தது. நேற்றிரவு அவன் ஆஸ்பத்திரியிலிருந்து தப்பித்துக் கொண்டு போய்விட்டதாகத் தகவல் கிடைத்



திருக்கிறது. போலீஸ் காவலை மீறி அவன் எப்படித் தப்பித்துக் கொண்டு போனான் என்பது பெரிய மர்மமாயிருக்கிறது. இரகசியப் போலீஸார் தீவிரமாகப் புலன் விசாரித்துக் கொண்டிருப்பதாய் அறிகிறோம். நிற்க,

''சூரிய நாராயணன் கைது செய்யப்பட்ட அன்று மறைந்துவிட்ட புரட்சிக்காரி இன்னும் அகப்படவில்லை என்று தெரிகிறது. அவள் மிகவும் சாமர்த்தியசாலி என்றும், புது டில்லியில் இரண்டு பெயர்கள் வைத்துக்கொண்டு வாழ்க்கை நடத்தியதாகவும், பெரிய பெரிய உத்தியோக வர்க்கக் குழாங்களில் பழகி வந்ததாகவும் தெரிய வருகின்றன. இந்தப் புரட்சிக்காரியைப் பற்றியும் இரகசியப் போலீஸார் புலன்விசாரித்து வருகிறார்களாம்.''

மேற்கண்ட செய்தியை மிகப் பரபரப்புடன் படித்து முடித்த அமரநாத், ''இதைப் பற்றி என்ன நினைக்கிறாய், சித்ரா! 'சூரிய நாராயணன்' என்ற பெயரைப் பத்திரிகையில் படித்தபோது சூரியாவின் ஞாபகமே எனக்கு வரவில்லை. ஆனால் இது நம்முடைய சூரியாவாகத்தான் இருக்க வேண்டும். அவனுடைய சாமர்த்தியத்தை என்னவென்று சொல்வது? இத்தனை நாட்கள் போலீஸுக்கு டிமிக்கி கொடுத்து வந்தது பெரிதல்ல; மறுபடியும் ஆஸ்பத்திரியிலிருந்து போலீஸ் காவலை மீறித் தப்பித்துக் கொள்வது என்றால் சாமான்யமா — அதிலும், உடம்பெல்லாம் காயம் பட்டுக் கிடக்கும் நிலையில்? என்ன பேசாமல் நிற்கிறாய், சித்ரா! சூரியாவின் காரியம் உனக்கு அதிசயமாயில்லையா?'' என்றான்.

''உங்கள் சூரியாவின் பெருமை இருக்கட்டும். நான் வேறொரு விஷயத்தைப் பற்றி யோசித்துக் கொண்டிருக்கிறேன். — மாயமாய் மறைந்த சீதாவைப் பற்றித்தான்! — ஸார்! தயவுசெய்து நான் சொல்வதைக் கேளுங்கள். இன்றைக்கு ஆபீசுக்கு லீவு போட்டு விடுங்கள். டெலிபோனில் கூப்பிட்டுச் சொல்லிவிடுங்கள். இரண்டு பேரும் பஞ்சநிவாரண விடுதிக்குப் போய் விட்டு வரலாம்! இப்பொழுதே புறப்பட்டுப் போக வேண்டும்!'' என்றாள் சித்ரா.

''பஞ்ச நிவாரண விடுதிக்கு இப்போது என்னத்துக்கு? எதற்காக நான் லீவு எடுக்க வேண்டும்?'' என்று அமரநாத் கேட்டான்.

''உங்களுக்கு இன்னும் தெரியவில்லையா? அன்றைக்கு நாம் வீதி ஓரத்தில் கிடந்தவளை எடுத்துக் கொண்டு வந்து அநாதை விடுதியில் சேர்த்தோமே? அவளைப் பற்றி ஒரு சந்தேகம் உண்டாகிறது....''

''ஒரு வேளை அவள் சீதாவாக இருக்கலாம் என்று சொல்லுகிறாயாக்கும். லட்சணமாகத்தான் இருக்கிறது. டில்லி எங்கே? கல்கத்தா எங்கே? அங்கேயிருந்து இங்கே எதற்காக அவள் வர வேண்டும்? அவள் கணவன் எழுதியிருப்பதுபோல் தேவப்பட்டணம் அல்லது ராஜம்பேட்டைக்குப் போயிருந்தாலும் அர்த்தம் உண்டு!'' என்றான் அமரநாத்.

''ரொம்பப் புத்திசாலிதான்! சீதா புரட்சிக்காரி என்பதை மறந்துவிட்டுப் பேசுகிறீர்கள்! ராஜம்பேட்டை அல்லது தேவப்பட்டணத்துக்குப் போனால் போலீஸாருக்கு நோட்டீசு கொடுத்ததுபோல் ஆகாதா? கல்கத்தாதான் தலைமறைவாயிருக்கச் சரியான இடம் என்று வந்திருக்கிறாள். வந்த இடத்தில், பாவம், ஏதோ ஆபத்து நேர்ந்திருக்கிறது. அது இருக்கட்டும். ஏன் ஸார்! நீங்கள்தான் முன்னே சீதாவைப் பார்த்திருக்கிறீர்களே? உங்களுக்கு அவளை அடையாளம் கண்டுபிடித்துச் சொல்ல முடியுமே?''

''கல்யாணத்தின் போது ஒரே ஒரு தடவை பார்த்ததுதானே — அதுவும் பத்து வருஷங்களுக்கு முன்னால்! எப்படி ஞாபகம் இருக்கும்? மேலும் அன்று இராத்திரி காரில் தூக்கிப் போட்டுக் கொண்டு வந்த போது அவள் முகத்தையே நான் பார்க்கவில்லை. இருட்டாகவும் இருந்தது. எப்படி அடையாளம் சொல்வது?''

''இப்போது வந்து நன்றாய்ப் பாருங்கள். பார்த்து அந்தப் பெண் சீதாதானா என்று கண்டுபிடித்துச் சொல்லுங்கள்!''

''எனக்கு என்ன அதைப் பற்றிக் கவலை? சீதாவாயிருந்தால் என்ன? யாராயிருந்தால் என்ன? நீயே கேட்டுத் தெரிந்துகொள். உன்னை அநாதை விடுதியில் கொண்டு போய் விட்டுவிட்டு நான் ஆபீஸுக்குப் போய்ச் சேர்கிறேன்'' என்றான் அமரநாத்.

இரண்டு பேரும் காரில் ஏறிக் கொண்டு அநாதை விடுதிக்குச் சென்றார்கள். அமரநாத் சொன்னபடியே சித்ராவை அங்கே இறக்கி விட்டுவிட்டுத் தான் ஆபீஸுக்குப் போனான்.

## 26. கவலை தீர்ந்தது

அன்று சாயங்காலம் கொஞ்சம் சீக்கிரமாகவே அமரநாதன் ஆபீஸிலிருந்து வீட்டுக்கு வந்தான். அநாதை விடுதியிலிருந்து சித்ரா திரும்பி வந்திருப்பாளா அல்லது தான் போய் அழைத்து வர

வேண்டுமா என்று சிந்தித்துக்கொண்டே வீட்டு வாசலில் காரை நிறுத்தினான். ஒரு வேளை திரும்பி வந்திருந்தால் அந்த ஸ்திரீயைப் பற்றிய விவரம் ஏதாவது தெரிந்து கொண்டு வந்திருப்பாளா என்றும் எண்ணமிட்டான்.

வீட்டு வாசலில் வந்து கார் நின்ற மறு நிமிடமே சித்ரா வாசற் பக்கம் வந்தாள். அவள் முகம் குதூகலத்தினால் மலர்ந்திருந்தது.

''சித்ரா! சித்ரா! முழுகிப் போய் விடாதே! மெதுவாகக் கரையேறிவிடு! நான் வேணுமானால் கைகொடுத்துத் தூக்கிவிடட்டுமா?'' என்று அமரநாத் கேட்டான்.

''என்ன இப்படித் திருவாய் மலர்ந்து திருஉளறல் உளறுகிறீர்கள்?'' என்று கேட்டாள் சித்ரா.

''நான் ஒன்றும் உளறவில்லை. உன்னைப் பார்த்தால் ஆனந்தக் கடலில் முழுகித் தத்தளிப்பவளைப் போலத் தோன்றியது. கைதூக்கிக் கரை சேர்க்கலாம் என்று பார்த்தேன்!'' என்றான் அமரநாத்.

''ஆனந்தத்துக்குக் காரணம் இருக்கிறது!'' என்றாள் சித்ரா.

''பின்னே இல்லாமல் இருக்குமா? அந்தப் பெண் இன்னவள் என்று கண்டு பிடித்துவிட்டாயாக்கும்!''

''ஆமாம்; நான் சொன்னதுதான் உண்மை ஆயிற்று. இருக்கவே இருக்காது என்று நீங்கள் சாதித்தீர்களே?''

''உன்னுடைய வாக்குப் பொய்த்துப் போகுமா, என்ன? தெய்வத்தைத் தொழாமல் கணவனைத் தொழுது அழுகிறவள் பெய்யெனப் பெய்யும் மழை என்று திருவள்ளுவரே சொல்லியிருக்கிறார்! அப்படியிருக்க உன் வாக்குப் பலித்ததற்குக் கேட்பானேன்?''

இருவரும் வீட்டின் முன்புறத்து ஹாலுக்குள் நுழைந்தார்கள். சோபாவில் ஒரு பெண் உட்கார்ந்து ஒரு கடிதத்தைப் படித்துக் கொண்டிருப்பதைப் பார்த்து அமரநாத் திடுக்கிட்டான்.

இவர்கள் வருவதைப் பார்த்ததும் அந்தப் பெண் எழுந்து அவசரமாய் அருகிலிருந்த மச்சுப் படியில் ஏறி மேலே சென்றாள்.

அவள் மறைந்ததும், ''சித்ரா! இவள்தான் சீதாவா? இன்னார் என்று கண்டு பிடித்ததோடல்லாமல் இங்கே அழைத்துக் கொண்டு வந்துவிட்டாயா?'' என்றான் அமரநாத்.

''ஆமாம்; நான் ஒரு காரியத்தில் முனைந்தால் அதை முடிக்காமல் வந்துவிடுவேனா?'' என்றாள் சித்ரா.

''அதைப் பற்றிக் கேட்பானேன்? நீ ஒரு காரியத்திலும் முனையாமல் இருக்க வேண்டுமே என்றல்லவா நான் பிரார்த்தனை செய்து கொண்டிருக்கிறேன்? இப்போது பார்! இந்தச் சனியனை இங்கே அழைத்துக் கொண்டு வந்துவிட்டாய்!''

''தயவுசெய்து தங்கள் திருவாயை மூடிக் கொள்ளுங்கள்.''

''தேவி! மன்னிக்க வேண்டும். இந்தத் தேவலோகத்துப் பெண்ணரசியைத் தேடிப் பிடித்து அழைத்துக் கொண்டு வந்திருக்கிறீர்களே, என்ன நோக்கத்துடன்? அதைத் தயவுசெய்து தெரிவித்து அருள வேண்டும்.''

''நோக்கம் என்ன வந்தது? இது என்ன கேள்வி? நம்ம பக்கத்துப் பெண். உங்கள் அருமைச் சிநேகிதர் சூரியாவின் அத்தங்காள். அவளை நடுவழி விடுதியிலேயே விட்டு வருகிறதா?''

''விட்டு விட்டு வந்தால் என்ன? அன்றியும், இவள்தான் சீதா என்பது என்ன நிச்சயம்?''

''நிச்சயந்தான்; என்னுடைய ஊகம் பிசகாய்ப் போகுமா ? இவளே ஒப்புக் கொண்டுவிட்டாள்.''

''இத்தனை நாட்கள்,—ஒரு வாரமாக, ஊர் பேர் சொல்லாதவள் இன்றைக்கு எதனுல் திடீர் என்று ஒப்புக் கொண் டாள் ?''

''அதற்கு ஒரு யுக்தி செய்தேன்.''

''அது என்ன அதிசய யுக்தி என்பதை அடியேன் அமரநாதன் தெரிந்து கொள்ளலாமா?''

''ஆகா! பேஷாய்த் தெரிந்துகொள்ள லாம். அமரநாதர் தெரிந்து கொள்ள முடியாத இரகசியம் சித்ராவிடம் என்ன இருக்க முடியும்? தாங்கள் என்னைப் பஞ்ச நிவாரண விடுதியில் விட்டு விட்டுப் போனீர்கள் அல்லவா? உடனே போய்ச் சீதாவிடம் பேசிப் பார்த் தேன். வழக்கம் போலவே அவள் முகம் கொடுத்துப் பேசவில்லை. குழந்தை களுக்கு உணவு பரிமாறிக் கொண்டிருந் தாள். பக்கத்தில் நின்ற சௌதாராணி அம்மாளிடம் நான் சென்று பேசினேன். பேச்சின் மத்தியில் சீதாவின் காது கேட் கும்படியாகச் சீதாவைப் பற்றிய செய்தியைச் சொன்னேன். சூரியா என்ற வார்த்தை காதில் விழுந்ததும் சீதா திடுக்கிட்டதைப் பார்த்துக்கொண் டேன். சற்று நேரத்துக்கெல்லாம் சீதா என்னைத் தேடிக் கொண்டு வந்தாள். தலைவி அம்மாளிடம் என்ன சொன் னேன் என்று கேட்டாள். அவளிடமும் சூரியாவைப் பற்றிய செய்தியைத் திருப் பிச் சொன்னேன். அவளுடைய முக பாவத்தைக் கவனித்துக் கொண்டே சொன்னேன். கடைசியாக, 'இதைப் பற்றி உனக்கென்ன இவ்வளவு ஆவல்? நீ யார்?' என்று கேட்டேன். அப் போதும் சொல்லாமல் சும்மா இருந் தாள். 'என்னிடம் ஏன் மறைக்கிறுய்? நீதானே சீதா ?' என்று நான் சட் டென்று கேட்டதும் அவளுக்கு ஆச் சரியமாய்ப் போய்விட்டது. பிறகு எல்லாவற்றையும் ஒப்புக் கொண்டு விட்டாள். அதன் பேரில்தான் வீட் டுக்கு வரும்படி கூப்பிட்டேன். முதலில் வருவதற்கு மறுத்தாள். அநாதை விடுதியில் குழந்தைகளுக்குப் பணி விடை செய்வது தனக்கு ரொம்பப் பிடித்திருக்கிறது என்று சொன்னுள். நாங்கள் எல்லோரும் வாரத்துக்கு இரண்டு நாட்கள் முறை போட்டுக் கொண்டு சேவை செய்வது போல் அவளும் செய்யலாம் என்று சொல்லி வற்புறுத்தி நம் வீட்டுக்கு அழைத்துக் கொண்டு வந்தேன். எப்படி என் னுடைய யுக்தி ?''

''கேட்பானேன்? நியாயமாக இந்திய சர்க்காரின் சி.ஐ.டி. இலாக்காவில் நீ உத்தியோகம் பார்க்க வேண்டும். உன் னைப் போன்ற சாமர்த்தியசாலிகள் தற் போது அந்த இலாகாவில் இல்லாதபடி யால்தான் யு.ஜி.க்களைப் பிடிக்க முடி யாமல் திண்டாடுகிறுர்கள்!''

''யு.ஜி.க்கள் என்றுல் என்ன?''

''யு. ஜி. என்றுல் தெரியாதா ? 'அண்டர் கிரௌண்ட்' என்று அர்த் தம். அதாவது பூமிக்கு அடியில் இருப்ப வர்கள். போலீஸாரிடம் அகப்படாமல் மறைந்திருந்து புரட்சி வேலை செய்ப வர்களுக்கு அந்தப் பட்டம் இப்போது வழங்கி வருகிறது. இந்தச் சாலைக்கு அடுத்த சாலையின் முனையில் சில போலீ ஸாரும் சி.ஐ.டி.க்காரர்களும் நின்று கொண்டிருப்பதை நான் வரும்போது பார்த்தேன். அவர்கள் யாரோ ஒரு யு. ஜி.யைத் தேடிக் கொண்டிருக் கிறுர்களாம்.''

''அப்படியா? ஒரு வேளை....'' என்று ஆரம்பித்த சித்ரா சட்டென்று நிறுத்திஞள்.

''ஒரு வேளை என்ன?''

''ஒன்றுமில்லை. நீங்கள் வந்து அந்தப் பெண்ணைப் பார்த்துப் பேசுகிறீர்களா ? அவள் இங்கே வருவதற்கே ரொம்பவும் தயங்கிஞள். இந்த வீட்டு ஆண் பிள்ளை என்ன சொல்வாரோ என்னமோ என்று முணுமுணுத்தாள். 'அதெல்லாம் இந்த வீட்டில் ஆண் பிள்ளை ஒருவரும் இல்லை, ஒரு ஹஸ்பெண்டுதான் இருக்கிறுர் !' என்று சமாதானம் சொல்லி அழைத்துக் கொண்டு வந்தேன். நீங்கள் அதைக் கொஞ்சம் உறுதிப்படுத்திஞல் நல்லது. மேலே போகலாம். சற்று வரு கிறீர்களா ?''

''வேண்டாம், வேண்டாம்! அந்த அம்மாள்தான் என்னைக் கண்டதும் வாரிச் சுருட்டிக் கொண்டு மேலே போய் விட்டாளே ! அவளை எதற்காக இப் போது தொந்தரவு செய்ய வேண்டும்?'' என்றுன் அமரநாத்.

''அதெல்லாம் ஒன்றுமில்லை. நான் வேண்டுமாஞல் மேலே போய்க் கேட்டுக் கொண்டு வருகிறேன்!'' என்று சொல் லிக் கொண்டே சித்ரா மச்சுப் படிகளில் குதித்தேறிச் சென்றுள்.

அங்கே சீதாவிடம் போய்ச் சித்ரா தன் புருஷனை அழைத்து வரட்டுமா என்று கேட்டதும், ''வேண்டாம், சித்ரா ! இப்போது வேண்டாம் ! நாளைக்கு ஆகட்டும்!'' என்றுள் சீதா.

சித்ரா ஏமாற்றத்துடன், ''ஏன் இப்ப டிச் சொல்கிறுய் ?'' என்று கேட்டாள்.

''இன்றைக்கு மனது சரியாக இல்லை. லலிதாவின் கடிதத்தைப் படிப்பதற்

காகக் கொடுத்தாய் அல்லவா? அதைப் படித்தபோது பழைய ஞாபகங்கள் எல்லாம் வந்தன. அதனால் மனசு நிம்மதியை இழந்திருக்கிறது. உன்னுடைய கணவரிடம் நாளைக்குப் பேசுகிறேன்!'' என்றாள் சீதா.

இப்படி அவர்கள் பேசிக் கொண்டிருந்த போதே கீழ்க்கட்டில் தடதடவென்று மனிதர்கள் பிரவேசிக்கும் சத்தம் கேட்டது. கால் பூட்ஸுகளின் சத்தம் அதிகமாயிருந்தது. இப்படித் தடபுடலாய் வருகிறவர்கள் யாராயிருக்கும் என்ற எண்ணத்துடன் சித்ரா மச்சுப் படிகளில் இறங்கி வந்தாள். பாதிப் படிகள் இறங்கியதும் கீழே போலீஸ்காரர்களும் சி. ஐ. டி.க்காரர்களுமாய் வந்து நிற்பதைப் பார்த்தாள். சித்ராவின் தலை கிறுகிறுவென்று சுழன்றது. மச்சுப் படிகளின் விளிம்புச் சட்டத்தைப் பிடித்துக் கொண்டு சமாளித்தாள்.

வந்திருந்தவர்களில் தலைவர் என்று காணப்பட்ட போலீஸ் இன்ஸ்பெக்டர் அமரநாத்திடம் பின்வருமாறு சொல்லிக் கொண்டிருந்தார்: ''இந்த யு.ஜி. பெண்பிள்ளை மிகக் கெட்டிக்காரி. ஒரே ஆசாமி சீதா என்றும் தாரிணி என்றும் இரண்டு பெயர்கள் வைத்துக்கொண்டு புதுடில்லிப் போலீஸை ஏமாற்றி வந்திருக்கிறாள். இப்போதுதான் பாருங்களேன். அநாதை விடுதிக்கு நாங்கள் வரப் போகிறோம் என்று தெரிந்து கொண்டு அரைமணிக்கு முன்னால் உங்கள் மனைவியை ஏமாற்றி இவ்விடத்துக்கு அழைத்து வரச் செய்திருக்கிறாள்! நீங்கள் வர வேண்டும் என்றுதான் இத்தனை நேரமும் தெரு முனையில் காத்துக் கொண்டிருந்தோம்.''

இதற்கு அமரநாதன், ''இன்ஸ்பெக்டர்! நீங்கள் ஏதோ ஒரு பெரிய தவறு செய்கிறீர்கள். இந்த ஸ்திரீ யு.ஜி. அல்ல; புரட்சி இயக்கத்தைச் சேர்ந்தவளும் அல்ல!'' என்றான்.

''உங்களுக்கு எப்படித் தெரியும், மிஸ்டர் அமரநாத்! எங்களிடம் வேண்டிய அத்தாட்சிகள் இருக்கின்றன.



## அதிலும் செயற்கை!

கிறிஸ்துமஸ் விழாவின்போது 'ஃபிர்' மரங்களை அலங்கரித்து, பரிசுப் பொருட்களைக் கட்டித் தொங்க விடுவதுண்டு. ஜெர்மன் கூட்டாட்சிக் குடியரசில் ஏறத்தாழ 130 இலட்சம் 'ஃபிர்' மரங்கள் கிறிஸ்துமஸ் விழாவுக்குப் பயன்படுத்தப்பட்டன. இவற்றில் 13 இலட்சம் மரங்கள், செயற்கை மரங்கள். இயற்கையான மரங்களைப்போல, மகமையாக இவை இருக்கும். பெரிய கடைகளில் செயற்கை மரங்களைப் பயன்படுத்திவிட்டு, மீண்டும் அடுத்த ஆண்டுக்காக அட்டைப் பெட்டியில் பாதுகாத்து வைத்துக் கொள்கிறார்கள். - யு. பி. எஸ்.

போட்டோப் படம்கூட இருக்கிறது!'' என்றார் இன்ஸ்பெக்டர்.

பின்னர் காரியங்கள் வெகு துரிதமாக நடந்தன. அமரநாத் மேலே ஏறி வந்து மச்சுப் படியில் பாதி வழியில் நின்ற சித்ராவிடம் விஷயத்தைச் சொன்னான். அவள் ரொம்ப அங்கலாய்த்தாள். ''இந்த அக்கிரமத்தை நீங்கள் தடுக்க முடியாதா? உங்களுடைய செல்வாக்கு எங்கே போயிற்று? இந்தப் போலீஸ் இன்ஸ்பெக்டருக்கும் உங்களுக்கும் சிநேகிதமாயிற்றே!'' என்றாள்.

''போலீஸ்காரர்கள் விஷயம் உனக்குத் தெரியாது. அவர்களுக்கு 'டியூட்டி' என்று வந்துவிட்டால் சிநேகிதர்களும் இல்லை; பந்துக்களும் இல்லை. ஈவிரக்கம் கிடையாது. 'லா மிஸராப்ளே' கதையில் வருகிற போலீஸ்காரரை நினைவிருக்கிறதல்லவா? அந்த மாதிரிதான் அநேகமாக எல்லாப் போலீஸ்காரர்களும்! நம்மையும் சேர்த்துப் பிடிக்காமல் விடுகிறார்களே, அதுவே பெரிது. இப்போது உன் சிநேகிதியை அனுப்பி வைக்க வேண்டியதுதான். பின்னால் கூடுமான முயற்சியெல்லாம் செய்து பார்ப்போம். 'ஹேபியஸ் கார்ப்பஸ்' வழக்கு வேண்டுமானாலும் நடத்துவோம்!'' என்றான் அமரநாத்.

சித்ரா கண்ணும் கண்ணீருமாய் மேலே ஓடிப் போய்ச் சீதாவிடம் விஷயத்தைச் சொன்னாள்.

முதலில் விஷயம் அவ்வளவு தெளிவாக விளங்கவில்லை சீதாவுக்கு. நன்குகப் புரியும்படி தெரிந்து கொண்டதும் சீதாவின் உள்ளத்திலிருந்து ஒரு பெரிய பாரம் நீங்கியது போலிருந்தது. என்ன செய்வது, எங்கே போவது என்கிற சங்கடமான பிரச்னைகள் எல்லாம் இனி மேல் இல்லை! கடவுளே பார்த்துத்தான் தனக்கு இத்தகைய சகாயத்தை அனுப்பியிருக்கிறார்! சிறைச்சாலைக்குள் போய் நிம்மதியாயிருக்கலாம். படிப்பும் அந்தஸ்தும் வாய்ந்த எத்தனையோ பெண் மணிகள் இப்போது சிறைச்சாலையில் பாதுகாப்புக் கைதிகளாயிருக்கிறார்கள். நாம் இருப்பதற்கு என்ன வந்தது?

குழந்தை வசந்தியை இப்போதைக்குப் பார்க்க முடியாது. அதுவும் ஒரு நல்லதற்குத்தான். குழந்தையைப் பார்த்து என்னத்தைச் சொல்வது! அப்பாவைப் பற்றிக் கேட்டால் என்ன பதில் கூறுவது? பேத்தியைப் பாட்டி நன்றாய்ப் பார்த்துக் கொள்வாள். கண்ணும் கருத்துமாக வளர்ப்பாள். அதுவே போதும். எப்படியாவது குழந்தை சௌக்கியமா யிருந்தால் சரி. நல்ல காலம் பிறந்து கடவுள் கூட்டி வைக்கும் போது பார்த்துக் கொள்ளலாம்.

கொஞ்சங்கூடத் தயக்கமில்லாமல் சீதா கீழே இறங்கி வந்து போலீஸாரிடம் தன்னை ஒப்புக் கொடுத்தாள்.

போலீஸ் இன்ஸ்பெக்டரிடம் அமரநாத், சீதா உயர் குடும்பப் பெண் என்றும், அவளை மரியாதையாக நடத்த வேண்டும் என்றும் கேட்டுக் கொண்டான். போலீஸ் இன்ஸ்பெக்டர் அதற்கு இணங்கி வாக்குக் கொடுத்தார்.

சீதா வீட்டைவிட்டுப் புறப்படும் தறுவாயில் சித்ரா கண்ணும் கண்ணீருமாக அவளைக் கட்டித் தழுவிக்கொண்டு, ''சீதா! கவலைப்படாதே! நான் இவரைக் கொண்டு 'ஹேபியஸ் கார்ப்பஸ்' வழக்குப் போடச் சொல்லி உன்னை விடுதலை செய்கிறேன்! சீக்கிரம் திரும்பி வந்துவிடுவாய்!'' என்றாள்.

''அப்படியெல்லாம் ஒன்றும் செய்ய வேண்டாம், சித்ரா! கடவுளே பார்த்து எனக்கு இந்தச் சகாயத்தைச் செய்திருக்கிறார். நீ என்னைப் பற்றிக் கவலைப் படாமலிரு!'' என்றாள் சீதா.

(தொடரும்)

# ஜாங்கோ ஜக்கி

கதை: **குட்டி கிருஷ்ணன்**

சித்திரம்: **ராஜு**

14



















இப்ப என்ன சொல்றீங்க?
நிஜத் துப்பாக்கி தான்! எங்கிருந்தோ தட்டிண்டு வந்துட்டான் திருட்டுப் பயல்!


இப்பவாவது நம்பறீங்களா? ஜேம்ஸ் பாண்ட் டெல்லாம் நம்ம கிட்ட பிச்சை வாங்கணும்!


நிஜம் தான், நிஜம் தான்!
எது நிஜம்? நீங்கள் இருவரும் வைரங்களைக் கடத்துவதா?


இல்லே, இல்லே! ஏதோ தண்ணாடி மனிதன் தான்! பொன்மொழிக்கு மாலை சூட்ட எடுத்துப் போகிறான். ஹிப்பினி மாதிரி நீளமா மாலை போட்டுக்க ஆசைப்பட்டா!
அதையும் பார்ப்போம்!


அனந்தாச்சாரி குதிரைச் சேணத்தை ஆராய்ந்ததும்....
வைரமுமில்லே, மணியுமில்லே! எல்லாம் கூழாங் கற்கள்! தூ!
ஒரு காதல் கடிதாசி கூடவா இல்லே?


அவிழ்ந்த குடுமியும் அவிழாத புதிருமாக அனந்தாச்சாரி போய்ச் சேர்ந்ததும்....
வைரங்கள் தொலைந்தாலும் ஸி. ஐ. டி. யிடமிருந்து தப்பிச்சோமே! நல்ல வேளை!
முட்டாள்! போலீஸிடமிருந்து தப்பித்தல் ஆச்சா? மல்லிகாவுக்கு என்ன பதில் சொல்வது? ஐயய்யோ!

தொடரும்

# என்னையும் ஏற்றுக் கொள்ளுங்கள்!





ஸ்ரீப்ரியா

தனியாக ஒரு மெஜந்தா நிற நெலக்ஸ் 'பாக்கெட்'டும் புறப் பட்டது.

''அப்பா 'பிரேம் நகர்' புடவை பதினெட்டு, இருபது ரூபாய்தானும். அம்மா சொன் னுள்.....'' என்று கூட வந்த சிறுமி கேட்டாள்.

''உஷ்.... வாயை மூடு. அதற்கு என்ன அவசரம்....? இந்த மாதமே ஏகப்பட்ட செலவு.....'' அவள் காதில் விழாமல் குழந்தையை அடக் கினுன் அவன்.

''**இ**ந்த 'மெஜந்தா'வை எடுத்துக் கோள், விமல். உன் வெந்த மேனிக்கு எடுப்பாக இருக்கும்.......''

''ம்.....? நானு ?''

''பின்னே நானு? என்ன யோசனே?....''

'' நாம் இங்கு வந்தது உங்களுக்காக, குழந்தைகள் யூனிஃபாரம் துணிக்காக. ஏதோ இது நன்ருயிருக்கிறது என்று நான் சொன்னுல் உடனே எடு என்பதா? வந்து.....''

'' வந்து... என்ன இழுக்கிருய்? சொல்லி விடு, வழக்கம் போல்.....''

அதைக் கேட்டு அவள் அழகாகச் சிரித் தாள். வயது முப்பத்தைந்தைத் தாண்டி விட்டாலும் இளமை மாருத சிரிப்பு அது. அதன் அர்த்தம் அவளுக்கு மட்டும், ஏன், அவனுக்கும் அவளுக்கும் என்று கூறுவதே சரி — புரிந்த செய்தி.... பரி பாஷை !

''நாம் வந்தது சீருடைத் துணிக்காக. அதற்கே 'லோன்' எடுத்து இந்த மாதச் செலவைச் சரிக்கட்டுகிறீர்கள்.....''

''இருந்தாலும், உனக்கும் ஒரு 'ஷேர்' அதில் இருக்கட்டுமே!''

''அப்படியானுல் குழந்தைகளுக்கு வாங்கு வது உங்கள் பங்கு, என் பங்கு இல்லே என்று குத்திக் காட்டுகிறீர்கள் அல்லவா ?'' அவள் சிணுங்கினுள். அதுவும் அழகாகத் தான் இருந்தது. அவன் அந்தக் குரலில், கன்னங்களின் குழைவில், கண்களின் மினு மினுப்பில் எதையோ தேடினுன். கடைசி யாக அவர்கள் கடையை விட்டுப் புறப்படும் போது சீருடைத் துணிப் பொட்டலத்துடன்

''டாட்டா.... ஆன்ட்டி....'' குழந்தை இயந்திரமாகச் சிரித்து, இறக்கையாகக் கையை விசிறது. அவள் அவனிடம் பிரியா விடைபெற்ருள், ஒரு நீண்ட பெருமூச்சுடன்.

''ம்.... என்னவானுலும் என் எல்லே இது தான். எனக்கு மிஞ்சுவது இதுதான். 'அந்த' உரிமை கிடைக்குமா?'' என்று இரகசியம் பேசியதோ அந்த மூச்சுக் காற்று !

அதை மறுக்க இயலாமல் ஸ்கூட்டரில் புறப்பட்டான் அவன்.

''ஜோடிப் புருக்கள் பார்த்தாயா ?'' பின் னுல் யாரோ குரல் கொடுத்தார்கள்.

''புருவா, பருந்துகள் என்று சொல். நியாயமான காதலர்களேப் புரு என்று அழ காக வர்ணிக்கலாம்.....'' இது முதல் குரலின் சிரிப்பு.

''இது அநியாயக் காதலா? காதலுக்குக் கண்ணில்லே! கண்ணியமும் இல்லே! அதற் கென்ன செய்வது? அவன் மூன்று குழந்தை களுக்குத் தகப்பன். அவள் திருமணமாகாத வள். ஆனுல்.....''

'' அவளுக்கு மணமாகவில்லேயா? பாவம், வேறே இளேஞனுக் கிடைக்கவில்லேயா ?'' இரு குரல்களும் பொறுமையால் வெந்த னவோ? பொங்கிப் பரிகசித்தனவோ?

◆ ◆ ◆

**வீ**ட்டுக்குள் நுழைந்தான் அவன். விளக்கு ஏற்றவும் மனம் இன்றி நிதான நடையுடன் சென்று படுக்கையில் விழுந்தான். கைகளில் நசுங்கிய புதுச் சேலே மார்பை அழுத்தியது.

இந்தச் சமயத்தில் அவன் வீட்டில் என்ன நடக்கும் என்று யோசித்தாள்.

என்ன நடக்கும்?

ராஜாவின் மனைவி தள்ளாடித் தள்ளாடித் தன் நோயுடன் போராடியபடி அவனுக்குப் பரிமாறுவாள்; அவள் உடலை ஒரு பழம் புடவை மறைக்க முயன்று கொண்டிருக்கும். அவள் உள்ளூறப் பொருமுவாள், தனக்கு நல்ல புடவை இல்லை என்று! ஆனால் வாய் திறந்து கேட்க மாட்டாள். ஏனெனில், அவள் மனைவி; வீட்டுப் பொறுப்பு உடையவள்! இந்த மாதச் செலவைச் சரிக்கட்டத் தனது எந்த அல்ப ஆசையையும் அடக்கக் கடமைப் பட்டவள். ஆனால்..... விமலா?

அவள் காதருகே யாரோ, 'கட்டிய மனைவியானால் அப்படிச் செய்வாள். நீ செய்வாயா, செய்வாயா?' என்று கேட்பது போலிருந்தது. அவள் மனைவியாக முடியுமா? ஏன், முடியாதா? ஒரு நாளும் முடியாது. இவளை அவன் நெருங்கும் போதே சுகத்துக்கு என்று தானே தேடுகிறான்? அப்படியானால் நோயாளி மனைவியைப் பெற்றுவிட்ட அவனுக்கு விமலா மனைவியாகவே முடியாதா? ஒருகால் மனைவி இறந்தால்.... சே....சே.... என்ன நினைவு! விமலா, உன் அற்ப ஆசைக்காக, மனைவியாகும் நைப்பாசைக்காக.... மூன்று குழந்தைகள் தாயற்றுப் போவதா? விமலாவின் அறிவு இடித்தது. ''விமலா! அவன் மனைவி இறந்தால் மட்டும் என்ன? நீ அவன் மனைவியின் ஸ்தானத்தை உடலளவில் தான் நிறைவேற்றலாம். ஆனால் குழந்தைகளுக்குத் தாய் அன்பைத் தரும் விஷயத்தில் அவன் மனம் எப்படி இருக்குமோ?'' அப்படியானால் அட கடவுளே! அவளுள் இருந்த பெண்மை அலறியது. கண்களில் வழிந்த நீர் புடவையில் பாய்ந்து தாமரை இலைத் தண்ணீர் போல் நைலக்ஸ் மேல் உருண்டது. அவள் உறவும் அதேபோல் ஒட்டாததுதானே! ஏன், அவளே அவனைப் பிரித்துத்தானே நினைக்கிறாள். இல்லாவிட்டால் மனைவி கேட்ட பதினெட்டு ரூபாய் புடவைக்கு யோசித்தவன் ஐம்பது ரூபாய்க்கு இவளுக்கு வாங்குவானா? ஒருகால் வீட்டில் குழந்தை போய், 'ஆபீஸ் ஆன்ட்டி' புடவை விஷயத்தைக் கூறினால்?

பாவம், அவன் மனைவி! கணவனை ராமச்சந்திர மூர்த்தியாக நினைத்து, 'ஆபீஸ் மாமி எதேச்சையாகக் கடைக்கு வந்தாள். அவள் புடவை செலக்ட் பண்ண உதவினேன்' என்று அவன் கூறுவதை அப்படியே நம்பி விடுவாள்! அதுதானே இந்த மனைவிகளிடம் உள்ள ஒரு குறை! அக்னி சாட்சியாகக் கைப் பிடித்த பிறகு, தான் நோயினாலோ, தாய்மையாலோ எப்படித் தவித்தாலும் கணவன் பிடி தளராது என்று நினைத்துவிடுகிறார்களே! ஆம், அவன் மனைவி.... இதோ விமலாவால் அப்படி நினைக்க முடிகிறதா? அவன் தன் வீட்டுக்குத் தன் மனைவியுடன் வாழும் வீட்டுக்குக் கடைசியாக எப்படியும் சென்றுவிடுகிறான் என்பதற்கே அந்த மனம் எப்படிப் பொறுமைப்பட்டுப் பதறுகிறது. அப்படியானால் மனைவிக்கு இருக்கக் கூடிய பண்பும், நம்பிக்கையும் அவளுக்கு இல்லை என்றுதானே பொருள்?

விமலா மறுபடியும் விம்மினாள்! 'ஐயோ! அப்படியானால் அவள் ஒரு வீடு, ஒருவனுக்கு மனைவி என்று வாழவே முடியாதா?' விமலா சிந்தித்தாள். ஒருகால் அவளும் அவன் குழந்தைக்குத் தாயானால்! விதி சிரித்தது! 'விமலா தோற்றாயே! அப்படி ஆகக் கூடாது என்றுதானே அவன் மூன்றும் குழந்தையுடன் இனி எப்போதும் வேண்டாம் என்று முடிவு செய்து விட்டான்.....!'

* * *

மணி பத்தடித்தது! பரபரப்புடன் காரியாலயத்துக்குப் புறப்பட்டாள் விமலா. அவள் இடுப்பில் மெஜந்தா நிற நைலக்ஸ் சேலை 'லோ ஹிப்பில்' இதோ நழுவிவிடும் என்று காண்போரைப் பயமுறுத்தும் வகையில் நின்றிருந்தது. தூய வெள்ளை நிற ஜாக்கெட். புதுவிதமான கொண்டையில் ஊசலாடியது, கனகாம்பரக் கொத்து. 'அவரு'க்குப் பிடித்தமான அலங்காரம்! அவள் உள் மனம் குதி போட்டது. ஆனால்....

என்ன ஏமாற்றம்! அன்று ஏன் வழக்கம் போல் ஸ்கூட்டருடன் சந்திக்க 'பஸ்' ஸ்டாப்பில் ராஜா காத்திருக்கவில்லை? மனைவிக்கு ஏதாவது உடம்பா? அல்லது அவனுக்கே..... சை... என்ன யோசனை! அதோ ஆபீஸில் அவனுடைய 'சீட்'டில் அவன் வந்ததற்கு அடையாளமாகத் தொங்கும் பை எங்கே? அப்படியானால் அவன் எங்கே?

ஒரு கணம் சுற்றுமுற்றும் நோக்கினாள் விமலா. அந்த இலாகாவே ஏதோ 'சூம்' என்று இருள் சூழ்ந்து நிற்பது போல் இருந்தது. அது ஏன்? பிரமையா? அவன் எங்கே?

''ஹூம், ஆடிய ஆட்டம் என்ன? என்று ஆகிவிட்டது.'' ஒரு லேடி கிளார்க் பக்கத்தில் இருந்தவளிடம் முனகினாள்.

''ஸ்.....'' அடுத்தவள் அடக்கினாள்.

''கிளியோபாட்ரா வருகிறது.''

''இருக்கட்டுமே! அதன் மினுக்கலும், ஸ்டைலும் பாரேன்.... புதுப் புடவை!







அவன்தான் வாங்கியிருப்பான். பி. எஃப். லோன் எடுத்தானே நேற்று. ஓ.... இன்று அவள் 'பர்த் டே' இல்லே?''

''இருக்கும் இருக்கும். தினத்துக்கு ஒரு சினிமாவும், மாதம் ஒரு புடவையும், ஆறு மாதங்களுக்கு ஒரு நகையுமாக வாரி வழங்கப் பணத்துக்கு என்ன செய்கிறான் மனிதன் என்று கவலைப்பட அவள் என்ன கட்டிய பெண்டாட்டியா ?''

''அது கிடக்கிறது, கழுதை! இப்போதைய நிலவரம் என்ன சொல்.....''

''என்னவா? ஈட்டிக்காரன் வந்து ஆபீஸ் வாசலில் கூச்சல் போட்டு அதிகாரி உள்ளே நுழையும் போது, ஊரைக் கூட்டிவிட்டான். 'அட்டாச்மெண்ட்' ஆர்டர் கொண்டு வருவேன்'என்றான். அதிகாரியும் கம்பெனி வாசலில் இதென்ன ரசாபாசம் என்று அவனைக் கூப்பிட்டுக் கலக்கினார். ஆளே விழுந்து போய்விட்டான்......''

''அப்புறம்? ஏதோ இருப்பதைப் போட்டதை வைத்தோ, விற்றோ ஈட்டிக்காரன் முகத்தில் எறியக் கூடாதா ?''

''என்ன இருக்கிறது, வைக்கவும், எடுக்கவும்? மனைவியின் தாலிதான் பாக்கி விட்டிலே! இவனிடம் என்ன பெயரும்? இவன் ஆளே இன்னொரு இடத்தில் 'அடகு' ஆயிற்றே!''

கள்ளச் சிரிப்பு கரைந்து வழிந்தது, அந்தப் பெண் குமாஸ்தா முகத்தில்.

விமலாவுக்கு ஏதோ புரிந்தும் புரியாமலும் இருந்தது. அவன் எங்கே?

''ஸ்கூட்டரைக்கூட இன்று காலையில் ஒருவரிடம் வைத்துப் பணம் புரட்டினானாம். அதைக் கண்டுதான் ஈட்டிக்காரன் நெட்டியிருக்கிறான். கையிலிருந்த பணத்தைப் பிடுங்கிக் கொண்டு சென்று விட்டான். ஆனால் இதைப் போல் இன்னும் எத்தனையோ பங்கு இருக்கிறதாம் தீர்க்க வேண்டிய கடன்.... இருபத்து நாலு மணி நேரத்தில் பணம் வராவிட்டால் போலீஸுக்குப் போய்க் கம்பி எண்ண வைப்பேன் என்று ஈட்டிக்காரன் சவால் விட்டு விட்டுச் சென்றிருக்கிறான். சுமார் பத்தாயிரம் இருக்குமாம்.......''

''அடப்பாவி! அவன் மனைவியின் நிலை?'' என்று மற்றொருத்தி அங்கலாய்த்தாள்.

விமலா மனம் வெதும்பினாள். ஊரெல்லாம் அவர்கள் உறவறிந்தும் அவர்கள் பரிவு எல்லாம் மனைவியிடம்தானே! வெறுப்பு இவளிடம்தானே! அப்படியானால்.... அவள் பெண்மைக்கு மதிப்பே இல்லையா ?

''**வி**மலா, இதென்ன இங்கு இந்த நேரத்தில் எதற்கு வந்தாய்?'' கதவைத் திறந்த ராஜா திடுக்கிட்டு நின்றான்.

''என்னை மனைவியாக ஏற்றுக் கொள்ளுங்கள்.... அதைக் கேட்கவே வந்தேன்...''

''விமலா, உனக்கென்ன பைத்தியமா ? இங்கு வந்தா அதைக் கேட்கிறாய்?''

''இல்லை ராஜா, என் பித்து தெளிந்து விட்டது. இதோ இந்தப் பர்சில் பத்தாயிரம் ரூபாய் இருக்கிறது.... உங்கள் கடன்களை எல்லாம் தீர்த்து விடுங்கள். ம்... பிடியுங்கள்.....''

''விமலா, இதென்ன? எனக்கா? பணமா? எதற்கு விமலா?'' என்று ராஜா திகைத்தான்.

''இதோ பாருங்கள், வாசலில் நின்று வழக்காட வேண்டாம். உறங்கும் உங்கள் மனைவி எழுந்து வரும் முன் என்னை ஒரு முறை உங்கள் மனைவியாக ஏற்றுக் கொள்ளுங்கள்... அதாவது.... என்னிடம் ஏன் உங்கள் நிலையை மறைக்கிறீர்கள்? மனைவியாயிருந்தால் மறைப்பீர்களா ? அப்படியானால் நான் வெறும் பணம் உறிஞ்சும் அட்டையா ? ஐயோ, ராஜா, நானும் ஒரு பெண். உங்கள் மனைவி எத்தனையோ தொல்லைகளில் உங்களுக்குத் தன் நகைகளைக் கழற்றிக் கொடுத்ததில்லையா? அதுபோல் எனக்கும் ஒரு முறை அந்த வாய்ப்பைக் கொடுங்கள். உடலால் மட்டும் இன்றி உள்ளத்தால், செயலால், கடமை உணர்வால் என்னை ஒரு முறை மனைவியாக ஏற்றுக் கொள்ளுங்கள்..... ஆனால் ஒன்று உறுதி.... இத்துடன் உங்களுடைய இந்த மனைவி இறந்து விடுவாள்.......''

''விமலா...!''

''பயப்படாதீர்கள். நான் இன்று மாலை நம் 'பாஸ்' வீட்டுக்குச் சென்று வெகுநேரம் பேசினேன். வேறு 'பிராஞ்சு'க்கு மாற்றிக் கொண்டு இன்று இரவு புறப்படுகிறேன். நானும் ஒரு மனைவியாகச் செயல்பட்டுவிட்ட நினைவின் பசுமையுடன் புறப்படுகிறேன்.... கட்டிய மனைவிதான் வாழ்வில் ஒருவன் மனைவி என்ற பெருமையுடன் சமூகத்தில் உலாவ முடியும் என்ற பாடத்தைக் கற்பித்த உங்கள் மனைவிக்கு என் நன்றி......''

பிரமித்து நின்ற ராஜாவின் கையில் கற்றை நோட்டுக்கள் சலசலத்தன. ஒரு கணம் மனைவியாக வாழ்ந்துவிட்ட அவள் அதோ நகர்ந்து போய்விட்டாள்!




கர்நாடக சங்கீதம் என்றே பெயர் பெற்றுள்ள நம் இசையைக் கர்நாடகச் சீமையில் வளர்த்து அரும் பணி புரிந்து வருகிறது பெங்களூரில் உள்ள கர்நாடக கான கலா பரிஷத். சாஸ்திரீய சங்கீதத்தைப் பேணிக் காத்துத் தரும் நன்னோக்கத்தோடு சங்கீத வித்வான்கள் ஒன்றுகூடித் தாங்களே இந்தப் பரிஷத்தை அமைத்துக் கொண்டு திறம்பட நிர்வகித்து வருவது குறிப்பாகப் பாராட்டுக் குரியது. கர்நாடக கான கலாபரிஷத்தின் ஆதரவில் மூன்று ஆண்டுகளாக சங்கீத மகா நாடும் சிறப்பாக நடத்தப்பட்டிருக்கிறது. இந்த மகாநாட்டில் பிற மாநில இசை நிறுவனங்களும் பங்கு கொள்வதற்கு அழைக்கப் படுகின்றன. ஆராய்ச்சி உரைகள் வழங்கப் படுகின்றன. நிபுணர்கள் விவாதங்கள் நடத்துகின்றனர். இசைக் கச்சேரிகளும் நிகழ்த்தப் படுகின்றன.

இவ்வருடம், எழுபத்தேழு வயதான பழம்பெரும் வித்வான் ஸ்ரீ ஏ. கே. சுப்பாராவ் அவர்களின் தலைமையில் கர்நாடக கான கலா பரிஷத்தின் மூன்றுவது மகாநாடும் இசை விழாவும் அண்மையில் விமரிசையாக நடந்தேறின. இதை ஒட்டி ஒரு கண்காட்சியும் அமைக்கப்பட்டிருந்தது. தில்லி சங்கீத நாடக அகாதெமி, ஆந்திரப் பிரதேச சங்கீத நாடக சங்கம், சென்னை தமிழிசைச் சங்கம் ஆகியன பங்குகொண்டன. தினந்தோறும் நடந்த மூன்று கச்சேரிகளில் ஒன்று, பரிஷத்தின் ஆண்டுப் போட்டிகளில் வெற்றி பெற்ற இளம் வித்வான் ஒருவருடையதாக விளங்கியது குறிப்பிடத்தக்கது. அகில இந்தியாவையும் சேர்ந்த வித்வான்கள் பலர் பங்கு கொண்டு இசை வழங்கினர்.

மைசூர் மாநில இசைக் கலைஞர்கள் விசேஷமாக வைடமின் 'ப' பலமின்றியே இவ்விதம் ஐக்கிய பாவத்துடன் ஒன்றுசேர்ந்து ஒரு நல்ல ஸ்தாபனத்தை நடத்தி வருவதை வாழ்த்துகிறோம். பரிஷத் மேன்மேலும் செழிப்புறக் கலைவாணியைப் பிரார்த்திக்கிறோம்.

1. ஆலத்தூர் ஸ்ரீநிவாசய்யர் -- ராமகிருஷ்ணு -- பாலக்காடு மணி அய்யர். 2. ஸ்ரீமதி எம். என். சுப்புலக்ஷ்மிக்கு நன்றி நவில்கிறார், மகாநாட்டுத் தலைவர் ஸ்ரீ சுப்பாராவ். 3 - 4. ஸ்ரீ வி. டி. ஸ்ரீநிவாசன். ஸ்ரீ சதாசிவம், ஸ்ரீ கே. ஆர். கிருபளானி, மைசூர் அமைச்சர் ஸ்ரீ பத்ரிநாராயணன், சபாநாயகர் ஸ்ரீமதி நாகரத்தினம்மாள் முதலியோர். 5. கர்நாடகச் சீமையின் பத்ததிப் பாட்டுக் குழுவினர்.



# இலக்கிய மலர்கள்

மீ. ப. சோமு



## 8. வளையும் தவளையும்

கவிதைக்குப் பொருள் அல்லது கருத்து முக்கியமே என்றாலும், அந்தக் கருத்தை அல்லது உணர்ச்சியை வெளியிடுகிற விதத்திலேதான் கவிதையின் தனிச் சிறப்பு இலங்குகிறது என்று கவிஞானிகள் பலரும் உலகெங்கிலுமே கண்டு சொல்லியிருக்கிறார்கள். உத்தி என்றும் துறைகள் என்றும் பல வண்ணங்களில் கருத்தை வெளியிடுகிற விதமானது பெருகி வளர்ந்திருக்கிறது. பழமையான சங்க காலத்திலிருந்து தமிழ்ப் புலவர்கள் தங்கள் பாடல்களுக்கு எத்தனையோ விதமான துறைகள் அமைத்துக் கொண்டு வானத்தையும் பூமியையும் சொல் கொண்டு அளந்திருக்கிறார்கள்.

மாலை நேரத்தில் அரசன் ஊர்வலம் (பவனி) வருகிறான். ஆனையின் மீது பல அணி அலங்காரங்களோடு வருகிறான். வீதியில் ஒவ்வொரு வீட்டுச் சாளரமும் திறக்கிறது. வாசற் கதவுகள் திறப்பதும் அடைப்பதுமாயிருக்கின்றன. கதவுகளின் ஓரங்களிலும், சாளரங்களின் வழியாகவும், சுவர் இடுக்குகளிலும் கூடக் கெண்டை விழிகள் மருளுகின்றன !

அவ்வளவுதான்; அழகு வடிவான மன்னனோடு மனம் ஓடி விடுகிறது. பிறகு என்ன ! ஒரே காதல் நோய்தான் ! பெண்கள் எத்தனையோ துன்பத்துக்கு உள்ளாகிறார்கள். உணவு செல்லவில்லை. உறக்கம் வரவில்லை; எதிலும் மனம் பற்றி நிற்கவில்லை. அன்னை கோபிக்கிறாள். தோழியர் கவலைப்படுகிறார்கள். ஊரார் பழிக்கிறார்கள். காதலுக்குள்ளான பெண்கள் படும்பாடு பெரும்பாடாக இருக்கிறது. உடல் மெலிகிறது. வளையல்கள் எல்லாம் கையிலிருந்து கழன்று விழுகின்றன !

இப்படி ஒரு காட்சி. கவிக் காட்சி. காதல்—நாடகம் !

அரசன் பவனி (உலா) வருவதும் பெண்கள் அவன் மீது காதல் கொள்வதும் காவிய ரசம் பொருந்திய நிகழ்ச்சிகள். தமிழ்ப் புலவர்கள் தங்கள் பாடல்களுக்கு இப்படி ஒரு நாடகத் துறையை அமைத்துக் கொண்டார்கள். கொண்டு, தங்களுடைய உயர்ந்த கற்பனைகளையெல்லாம் ''உலா'' என்ற இந்தத் துறையிலே மோகனமாகப் பொழிந்தார்கள். முத்தொள்ளாயிரம் போன்ற சங்க நூல்களில் இந்தத் துறை அற்புதமான அழகோடு நின்று கவிரசத்தை வழங்குகிறது.

அரசன் உலா வந்ததால், அவனைக் கண்டு காதலுற்ற பெண்ணுக்கு உடல் மெலிந்து போய் வளைகளெல்லாம் கழன்று விழுந்தன என்பதை, அரசன் வீதியிலே வந்து பெண்களின் வளைகளைத் திருடிக் கொண்டு போய்

விட்டான் என்று சொல்வார்கள். இப்படிச் சொல்வதிலே ஒரு கலை, உல்லாசக் கற்பனை யோடுகூடிய ஒரு கவியெழில் இருக்கிறது! உண்மைக்குக் கொடுக்கிற ஒரு காவிய உல்லாசம் அது! இந்த உல்லாசத்தைத் தாங்கித் துள்ளி வருகிற பாடல்கள் தமிழில் ஏராளம்!

சங்க காலத்துக்குப் பிறகும், தனிப் பாடல் களிலே பல புலவர்கள் இந்த உத்தியைக் கையாண்டு வளையல்களை உருட்டிவிட் டிருக்கிறார்கள்!

தலைவன் தெரு வீதியிலே வந்தான், வளையல்களைக் கவர்ந்தான் என்று சொல்லிப் பெரிய பெரிய காதற் திரைப்படங்களை ஓட விடுகின்றன, தமிழ்க் கவிகள்! நூறு நாள், இருநூறு நாள் அல்ல, ஆயிரம் இரண்டாயிரம் ஆண்டுகளுக்கும் மேலாக ஓடுகிற, ஓடி வருகிற, திரைப்படம் இது!

கம்பருடைய ஒரு கற்பனையைப் பார்க்க லாம். அரசனுடைய பவனிக்குச் சொல்கிற அத்தனை உல்லாச உபசாரங்களையும் "மாத் தத்தன்" என்பவனுக்குப் பொருத்தி ஒரு காதல் நாடகத்தை நடத்தி ஆனந்தம் காட்டு கிறார், கவிச் சக்கரவர்த்தி, தமது தனிப் பாடல் ஒன்றிலே!

மாத்தத்தன் வீதியிலே வந்தான். ஒரு பெரிய பகற் கொள்ளையே செய்துவிட்டுப் போகிறான். திருடக் கொடுத்த பெண்களில் ஒருத்தி பேசுகிறாள்:

**இருந்தவளைப் போனவளை**
**என்னை அவளைப்**
**பொருந்த வளைபறித்துப்**
**போனான் —**

[இருந்தவளை — அதோ சற்றுமுன் அங்கே இருந்தாளே அந்தப் பெண்ணை. போனவளை— அதோ இப்போதுதான் போனாள் பார், அவளை. என்னை — இந்தப் பாவியையும். அவளை — அதோ பாருங்கள், போய்க் கொண்டேயிருக்கிறாளே, அந்தப் பெண்ணை. பொருந்த — ஓசைப்படாமல், அமைதியாக, கூட்டு மொத்தமாக! வளை பறித்துப் போனான் — வளையலைத் திருடிக் கொண்டு போய் விட்டான்.]

இந்த அநியாயமான செயல், எல்லோரை யும் வித்தியாசமின்றிச் சமதர்ம உணர்ச்சி யோடு கொள்ளையடிக்கிற அக்கிரமம் எங்கே நடக்கிறது தெரியுமா?

பொதுவாகத் திருட்டு நடக்கிற இடம் பஞ்சம் பற்றிய வறண்ட இடமாக அல்லவா இருக்கும். ஆனால் மாத்தத்தன் செய்த கொள்ளைப் பறி எங்கே நடந்தது?

**— பெருந்தவளை**
**பூத்தத்தத் தேன்சொரியும்**
**பொன்னிவள நன்னாட்டில்**

[பெருந்தவளை — மொக்கைத் தவளை; தேன் குடித்து வளமாகக் கொழுத்த தவளை. பூத்தத்த — பூவிலே தத்திப் பாய்வதால். தேன் சொரியும் — மலரில் இருந்து தேன் கொட்டுகிற. பொன்னி வள நன்னாட்டில்— காவிரி நதி பாய்ந்து வளம் செய்கிற தரும பூமியாகிய சோழ தேசத்தில். பொன்னி — காவிரி நதி.]

திருட்டு நடக்க அவசியமில்லாதபடி அத் தனை வளம் கொழிக்கிற நல்ல சோழ நாட்டிலே,

**மாத்தத்தன் வீதியினில்**
**வந்து**

மாத்தத்தன் என்ற பெயருடைய அந்த அழகுத் திருடன் வீதியிலே பவனி வந்து,

**பொருந்த வளைபறித்துப்**
**போனான்!**

முதல் இரண்டு அடிகளிலும் வளையலைத் திருடிப் போனான் என்று முறையீடு சொல்லி விட்டுத் திருடனைக் கொண்டு போய்க் கடைசி அடியிலே மறைத்து வைக்கிறார் கவி! இடை யில் நடு மத்தியிலே தனிச் சீரில் ஒரு பெருந் தவளையை உட்கார்த்தி வைத்து அதை அடுத்த அடியிலே "தத்" "தத்" என்று தத்தவிடுகிறார் கம்பர்! ஒலி செய்கிற உல் லாச விளையாட்டு அது.

"பூத்தத்த" என்று தத்துகிற ஒலி மாத் தத்தனில் முழு வேகம் கொள்ளுகிறது.

**இருந்தவளைப் போனவளை**
**என்னை அவளைப்**
**பொருந்த வளைபறித்துப்**
**போனான் - பெருந்தவளை**
**பூத்தத்தத் தேன்சொரியும்**
**பொன்னிவள நன்னாட்டில்**
**மாத்தத்தன் வீதியினில்**
**வந்து!**

பாடல் முழுதும் வளை ஒலிக்கிறது. தவளை துள்ளுகிறது. கம்பருடைய தனிப் பண்புள்ள அருமையான ஒலி ஓவியம் இது!

## ஆனைமுகன் அடியார்கள் கவனிக்க!



பிரதிஷ்டை செய்யப்படுமுன்பே தம் சக்தியைக் காட்டியிருக்கிறார் ஒரு சித்தி விநாயகர். இனிமேல்தான் இவருக்கு விக்கிரகம் வடித்தாக வேண்டும். ஆலயமும் இனிதான் கட்டத் தொடங்க வேண்டும். பெருங்களத்தூரிலுள்ள காமராஜ் நகர் வாசிகள் சிலர் தங்கள் பேட்டையில் விநாயகருக்குக் கோயிலெடுக்க வேண்டும் என்ற ஆர்வத்துடன் ஸ்ரீ காமகோடி பீடாதிபதிகளிடம் ஆசி கோரி விக்ஞாபனம் செய்து கொண்டனர். உடனே சாக்ஷாத் பெரியவாள் அங்கே தரிசனத்துக்கு வந்திருந்தவர்களிடமிருந்தெல்லாம் அப்போதே இந்த ஆலயத் துக்காக 'நிதி வசூலித்து'த் தந்திருக்கிறார்! எனவே, இந்தப் பிள்ளையாரப்ப னுக்கு ஏதோ ஒரு தனிச் சிறப்பு இருக்கும் போலிருக்கிறது. ஸ்ரீ பெரியவாளின் பேரன்புடன் மனமுவந்து தொடங்கி வைத்துள்ள இந்த நற்பணியில் அன்பர்கள் அனைவரும் பங்குகொண்டு, அடியிற்காணும் முகவரிக்குத் திரவியம் அனுப்பி வைக்க வேணும்: டி. கிருஷ்ணமூர்த்தி, காரியதரிசி, ஸ்ரீ விநாயகர் ஆலயத் திருப்பணிக் குழு, 32, விஜயலக்ஷ்மி தெரு, காமராஜ் நகர், ஸ்ரீநிவாச நகர் அஞ்சல், சென்னை — 63.

வியக்கவைக்கும் உங்கள் அழகை
வெளிப்படுத்திக் காட்டும் ஜரிகைப் புடவைகள். இப்போழுது
ஹேண்ட்லூம் ஹவுஸில் வந்து குவிந்துள்ளன.

உங்கள் அழகை
சிறப்பாக எடுத்துக்காட்ட
காஞ்சிபுரம், பெனாரஸ், ராஜஸ்தான்
புடவைகள்.



**ஹேண்ட்லூம் ஹவுஸ்**

9, ரத்தன் பஜார், சென்னை 600003

**6-1-73 முதல் 10% விசேஷ தள்ளுபடி உண்டு**

# மலர்களிலே அவள் மல்லிகை!




மலர்களின் ராணி, மல்லிகை!
இளமைப் பூங்காவில் பூரிப்புடன்
பூத்துக் குலுங்கும் இந்த
இளமங்கை, அழகு
ராணியாகத் திகழ்கிறாள். அந்த
புத்தெழில் என்றுமே நிலைத்திட
அவள் ஜெய் அழகு சாதன சோப்
உபயோகிக்கிறாள். மல்லிகை மணம்
வீசும் ஜெய் சோப் மேனியை
மிருதுவாக்கி, பொன்னொளி
வீசச் செய்கிறது.

மல்லிகை
மணம் கமழும்

**ஜெய்**

அழகுசாதன
சோப்

டாடா தயாரிப்பு

OBM.7002 TM

# சத்திய வெள்ளம்

## நா. பார்த்தசாரதி

### இருபத்திஏழாவது அத்தியாயம்

குறவஞ்சி கதகளி நிகழ்ச்சிகள் முடிந்த பின்பும்கூட, கண்ணுக்கினியாள் அங்கிருந்து உடனே வெளியேறிச் செல்ல முடியாமல் இருந்தது. அவளுடைய உணர்வுகள் மற்றவர்களுக்குப் புரியவில்லை. மற்றவர்களுடைய உணர்வுகளோடு அவளால் கலக்க முடியவில்லை. மனம் போயிருக்கிற இடத்துக்கு உடம்பு போக முடியாமலும் உடம்பு தங்கியிருக்கிற இடத்தில் மனம் இல்லாமலும் அவள் அங்கே அப்போது தவித்துக் கொண்டு இருந்தாள். பாண்டியன் போயிருக்கிற இடத்தில் என்ன நடக்குமோ, ஏது ஆகுமோ என்ற எண்ணங்களிலேயே இருந்ததால் மற்றவர்கள் தன்னிடம் எதைக் கேட்கிறார்கள், அதற்குத் தான் என்ன பதில் சொல்கிறோம் என்ற பிரக்ஞையே அவளுக்கு இல்லை. ஆனாலும் மற்றவர்கள் தன்னை நோக்கி முகம் மலர்ந்தபோது அவளும் பதிலுக்கு முகம் மலர்ந்தாள். மற்றவர்கள் தன்னிடம் எதையாவது பேசியபோது அவளும் பதிலாக எதையோ சொன்னாள். நிகழ்ச்சிகள் நிறைவேறியபின்பும், கதகளி குழுவினருக்கும், பிற முக்கியமானவர்களுக்கும் ஒரு விருந்து கொடுக்க ஏற்பாடாகியிருந்தது. அவளைப் போலவே காலையிலிருந்து அங்கேயே இருக்கும் மாணவ மாணவிகளால் வெளியில் என்ன நடந்து கொண்டிருக்கிறது என்பதைப் பற்றி அதிகமாக எதையும் தெரிந்து சொல்ல முடியாமல் இருந்தது. அவள் 'கிரீன் ரூமு'க்குள் இருந்தபோது வந்து தகவல் சொல்லிய சக மாணவிகூட மாணவர்களும் பாண்டியனும் மல்லை இராவணசாமியின் வீட்டுத் தோட்டத்தில் மறியல் செய்தபடி அமர்ந்திருப்பதாக மட்டுமே தெரிவித்திருந்தாள். மாலை ஆறு ஆறரை மணிக்கு இருந்த நிலவரத்தைத்தான் அவள் தெரிவித்திருந்தாள். அதற்குமேல் அங்கே என்ன நடந்ததென்று தெரிந்து கொள்ள முடியாமல் இருந்தது. அண்ணாச்சி கடையும் பூட்டப்பட்டு இருந்ததாக ஃபோனில் தகவல் தெரிந்ததனால் சந்தேகமும், பரபரப்பும் மேலும் மேலும் பெருகும் மன நிலையோடு இருந்தாள் அவள்.

விருந்து முடிந்ததும் டாக்டர் கருணாகர மேனன் விருந்தினர்களையும் கதகளி கலைஞர்களையும் பாராட்டிப் பேசினார். கேரள கதகளியோடு தமிழ்நாட்டுக் குறவஞ்சியை ஒப்பிட்டுப் பேசிக் கண்ணுக்கினியாளின் நடிப்பையும் பாராட்டினார். தென்னிந்தியாவிலேயே மல்லிகைப்பந்தல் பல்கலைக் கழகம் ஒன்றில்தான் இந்த 'நாடகத் துறைப் பட்டப் படிப்பு' இருக்கிறது என்பதைப் பற்றியும் மேனன் பெருமையாகச் சொல்லிக் கொண்டார். எல்லாம் முடிந்து கண்ணுக்கினியாளும் சக மாணவிகளும், விடுதி அறைக்குத் திரும்பிய போது இரவு பத்தேமுக்கால் மணிக்கு மேல் ஆகிவிட்டது. விடுதியிலே வார்டன் அறை முகப்பிலிருந்த டெலிபோன் பூத் பூட்டப்பட்டுவிட்டது. மற்ற அறைகளிலும் அநேகமாக விளக்குகள் அணைக்கப் பெற்று உறங்கத் தொடங்கியிருந்தார்கள். அறையில் உடனிருக்கும் மாணவி விஜயலட்சுமி தூக்கக் கிறக்கத்தோடு எழுந்து வந்து கண்ணுக்கினியாளுக்குக் கதவைத் திறந்துவிட்டு விட்டு உடனே போய்ப் படுக்கையில் இழுத்துப் போர்த்திக் கொண்டு படுத்து விட்டாள். வார்டனை எழுப்பி டெலிபோன் பூத் அறையைத் திறக்கச் சொல்லிப் பேசலாமா என்கிற தயக்கத்தோடு சிந்தித்தாள் அவள். யாரோடு பேசி விவரங்களை அறிவது என்று திகைப்பு ஏற்படவே, அந்த எண்ணத்தையும் கைவிட வேண்டியதாயிற்று. உடை மாற்றிக்கொண்டு ஒரு கிளாஸ் தண்ணீர் பருகியபின் விளக்கை அணைத்துவிட்டு அவளும் படுத்தாள். உறக்கம் வரவில்லை. புரண்டு புரண்டு கரையில் இறக்கெறிந்த மீனைப்

படுக்கையில் தவித்தாள் அவள். எப்போது விடியும் என்று மனம் பதறிய படியே படுத்திருந்தவள் தன்னையும் மீறிய அயர்ச்சியில் சிறிது கண்ணயர்ந்தாள். விடிந்ததும் உடனே தினசரிப் பத்திரிகைகள் கிடைக்காத ஊர் மல்லிகைப் பந்தல். மதுரையிலிருந்து வெளிவருகிற தினசரிகளும் சரி, சென்னையிலிருந்து வருகிற தினசரிகளும் சரி காலை ஒன்பது மணிக்கு மேல்தான் நகர எல்லைக்குள்ளேயே வந்து சேரும். அதனால் செய்தித் தாளிலிருந்து தகவல் தெரிந்து கொள்வதற்குள் யாரிடமாவது விசாரித்தே தெரிந்துகொண்டுவிடலாம் என்று விடிந்ததும் பல் விளக்கிவிட்டு அறைத் தோழியோடு வெளியேறினாள் கண்ணுக்கினியாள். காப்பிக்காக மெஸ்ஸுக்குள் நுழைந்தபோதே அவள் எதிர்பார்த்த தகவல் தெரிந்துவிட்டது. முந்திய இரவு ஏழு - ஏழரை மணிக்கு மல்லை இராவணசாமியே வழிக்குவந்து மாணவி பத்மாவிடம் தவறாக நடந்துகொண்ட கண்டக்டரைக் கொல்லைப்புற வழியாகத் தமது பங்களாவுக்கு வரவழைத்து மாணவர்களுக்கு முன்னால் நிறுத்தி அவர்களிடம் மன்னிப்புக் கேட்கச் சொல்லி விட்டாராம். ஆனால் மன்னிப்புக் கேட்டு முடிந்து மாணவர்கள் 'கோபம்' தணியும்வரையில் தந்திரமாக இருந்த இராவணசாமி இருளில் தம் பங்களாவிலிருந்து வெளியேறிய மாணவர்களைப் பாதி வழியில் ஆட்களை அனுப்பித் தாக்குவதற்கு ஏற்பாடு செய்தாராம். மாணவர்கள் சேர்ந்து கூட்டமாகத் திரும்பி வந்து கொண்டிருந்ததாலும் அண்ணாச்சி முதலியவர்கள் துணைக்கு இருந்ததாலும் இராவணசாமி அனுப்பிய முரடர்களைச் சமாளித்து விரட்டியிருக்கிறார்கள். கண்ணுக்கினியாளும் அவளுடைய அறைத் தோழியும் மெஸ்ஸிலே அமர்ந்து காப்பி குடித்துக் கொண்டிருந்தபோது சக மாணவிகள் சுற்றிலும் சூழ்ந்துகொண்டு இந்த விவரங்களையெல்லாம் சொன்னார்கள். பாண்டியனுக்கும் மாணவர்களுக்கும் எந்த அபாயமும் நேரவில்லை என்று அறிந்த பின்பே அவள் நிம்மதி அடைந்தாள்.

''இவ்வளவு நடந்திருக்கிறதே, வி. சி. ஏன் வாயை மூடிக் கொண்டு சும்மா உட்கார்ந்திருக்கிறார்? மாணவர்கள் பஸ் ஊழியர்கள் தங்களிடம் மன்னிப்புக் கோர வேண்டி இராவணசாமியின் பங்களா வாசலில் மறியல் செய்தபோது வி. சி. ஏன் போய்த் தலையிடவில்லை? நமக்காக இல்லாவிட்டாலும் ஆளும் கட்சிப் பிரமுகர் இராவணசாமிக்காகக் கூட அவர் பரிந்துகொண்டு வரவில்லையே, ஏன்?''

''நேற்று முழுவதும் வி.சி. யூனிவர்சிடி பக்கமே வரவில்லை! லேக்வியூ ஹோட்டலில் ஏதோ செமினாராம். அங்கேயே இருந்துவிட்டார்......''

''இந்த மாதிரி நேரங்களில் தப்பி நழுவுவதற்கு அவருக்கு எப்போதும் இப்படி ஏதாவது ஒரு செமினார் இருக்கும்'' என்றாள் ஒரு மாணவி. அவள் குரலில் கேலி நிரம்பியிருந்தது.

காப்பியை முடித்துக் கொண்டு காலை எட்டு மணிக்கு மெஸ்ஸிலிருந்து திரும்பிய சிறிது நேரத்துக்கெல்லாம் பாண்டியனிடமிருந்தே அவளுக்கு ஃபோன் வந்தது.

''நம்முடைய போராட்டம் வெற்றியாக முடிந்து விட்டது'' என்று தொடங்கி நடந்தவற்றை விவரித்த அவன், ''இங்கே ஹாஸ்டலுக்குத் திரும்ப இரவு பத்தரை மணிக்கு மேலாகிவிட்டது. மன்னித்துக்கொள்! நீ திரும்பத் திரும்பச் சொல்லியிருந்தும் இந்தக் கலவரங்களினால் உன் நாடகத்துக்கும் கதகளிக்கும் வர முடியாமல் போய்விட்டது. அந்தப் பெண் — அது தான் உன் சிநேகிதி பத்மாவிடம் இனிமேல் பயப்படாமல் தினமும் பஸ்ஸில் வரலாம் என்று சொல்லு'' என்றான்.

''எங்க நாடகமும் விருந்தும் முடிந்து நான் அறைக்கு வரப் பதினொரு மணிக்கு மேலே ஆயிடிச்சு. எனக்கு உங்களைப் பத்தி ஒரே கவலை. விசாரிச்சுத் தெரிஞ்சுக்கவும் முடியலே. இராத்திரி எல்லாம் தூக்கமில்லாமல் தவிச்சுப் போனேன்.''

''நீ கவலைப்பட்டுத் தவிச்சுக்கிட்டிருப்பேன்னுதான் ராத்திரியே உனக்கு ஃபோன் பண்ணிச் சொல்ல நினைச்சோம். ஃபோன் பண்ண முடியாமப் போச்சு. அண்ணாச்சியும் கடையைப் பூட்டிக்கிட்டு எங்களைப் பார்க்க அங்கே வந்திட்டாரு. அவரும் வேறே சில ஆட்களும் எங்களைத் தேடிக்கிட்டு அங்கே வந்திருக்காட்டி அடிக்க வந்து விரட்டின குண்டர்கிட்டேயிருந்து நாங்க தப்பியிருக்க முடியாது. அண்ணாச்சியும் அவரோட ஆட்களும் வந்து நின்னது எங்களுக்குப் பெரிய பாதுகாப்பா இருந்திச்சு'' என்றான் பாண்டியன். கண்ணுக்கினியாள் தன் பதிலில் ஒரு விஷயத்தை அவனுக்கு நினைவூட்டினாள்:

''சரி! அது போகட்டும். எடுத்த காரியத்தை வெற்றியா முடிச்சாச்சு. பேரவைத் தேர்தல் முடிஞ்சு தலைவர் செயலாளர் எல்லாரும் வந்தப்புறமும் கூட மாணவர் பேரவைத் தொடக்க விழாவையோ, மாணவர்களின் விவாத அரங்கையோ நாம் இன்னும் நடத்த

வில்லை. இங்கே பல மாணவ மாணவிகளுக்கு இது ஒரு பெரிய குறையாக இருக்கும் என்று தெரிகிறது..''

'' அடுத்த வாரம் நேரு விழாவைக் கொண்டாடுகிறோம். சோஷியாலஜி பேராசிரியர் வீரராகவன் தலைமை வகிக்கிறார். நேருவின் சோஷலிஸ சமுதாயத்தை அமைக்கும் ஆசை அவர் காலத்திலேயே வெற்றி பெற்றது என்றும் வெற்றி பெறவில்லை என்றும் இரு அணிகளாகப் பிரிந்து நாம் அந்த விழாவில் ஒரு விவாதப் பட்டி மன்றம் நடத்துகிறோம். அதற்கு ஏற்பாடுகள் நடைபெற்றுக் கொண்டிருக்கின்றன. யூனிவர்ஸிடி ஆடிடோரியத்தில் இந்த விழாவை நடத்தப் போகிறோம்.''

''ரொம்ப சரி! அதில் நீங்கள் எந்தக் கட்சியை எடுத்துக் கொண்டு விவாதிக்கப் போகிறீர்கள்?''

'' நீ எந்தக் கட்சியை எடுத்துக் கொண்டு விவாதிக்கப் போகிறாயோ, அதற்கு நேர் எதிர்க் கட்சியை எடுத்துக் கொண்டுதான் நான் விவாதிப்பேன்...''

''அப்படியானால் உங்கள் கட்சி நிச்சயமாகத் தோற்றுத்தான் போகப் போகிறது.......''

''போதும்! ஃபோனை வை. இங்கே 'பூத்'துக்கு வெளியே ஃபோனுக்காக நிறைய மாணவர்கள் காத்துக் கொண்டிருக்கிறார்கள். மற்றதை நேரில் பேசிக் கொள்ளலாம்'' என்று சொல்லி அந்த நீண்ட டெலிபோன் உரையாடலை முடித்தான் பாண்டியன். என். சி. சி.க்காக அவன் ஓட வேண்டியிருந்தது.

அன்று காலை வகுப்புக்களுக்குமுன் மாணவர்களை மைதானத்தில் கூடச் செய்து துணைவேந்தர் தாயுமானவனார் இருபத்தைந்து நிமிடங்கள் அறிவுரை வழங்கினார். ''மாணவர்கள் கலகக்காரர்கள் என்றே தொடர்ந்து பெயரெடுத்துவிடக் கூடாது. ஊர்வலங்களும் ஆர்ப்பாட்டங்களுமே



நமது கல்வியாகிவிடாது. பஸ் ஊழியர்களோடு மோதல்களைத் தவிர்க்க வேண்டும். உங்கள் கோரிக்கைகளை நீங்கள் என்னிடம் முறையாகத் தெரிவித்தால் நான் உடனே கவனிப்பேன்'' என்று அவர் பேசியபோது அதை எதிர்த்தும், நகையாடியும், கூட்டத்திலிருந்த மாணவ மாணவிகள் குரல் எழுப்பினார்கள். எதிர்ப்பைக் கண்டு பேச்சைச் சுருக்கமாக முடித்துக் கொண்டு தம் அறைக்குப் போய்விட்டார் துணைவேந்தர். முதல் பாட வேளை இதில் போய்விட்டது. துணைவேந்தரின் மைதானக் கூட்டம் முடிந்து கலையும் போது பாண்டியனை மீண்டும் சந்தித்து, ''இன்று பகல் காட்சிக்கு 'ஹில்வியூ' தியேட்டரில் ஆங்கிலப் படம் பார்க்கப் போக வேண்டும்! இரண்டரை மணிக்கு உங்களை யூனிவர்ஸிடி லைப்ரரி வாசலில் சந்திக்கிறேன்'' என்று சொல்லிவிட்டு அவன் பதிலைக்கூட எதிர்பாராமல் மற்ற மாணவிகளோடு போய்விட்டாள் கண்ணுக்கினியாள். இரண்டாவது பாட வேளையில் அவளுக்குத் 'தோற்பாவைக் கூத்து, குறவஞ்சி நாடகங்கள்' போன்ற ஆரம்ப கால நாடகங்களினது நிலை குறித்து விரிவுரை நடந்தது. அதே வேளையில் பாண்டியனுக்கு வரலாற்றுப் பாடம். வரலாற்று விரிவுரையாளர் சபாபதி கால்மணி நேரம் பேசினாலும் அதில் 'இந்தக் கால கட்டத்திலே' என்ற தொடர் பதினைந்து முறையாவது திரும்பத் திரும்ப வரும். அன்று அவர் வகுப்புக்குள் நுழையுமுன்னேயே போர்டில் சாக்பீஸால், 'இந்தக் கால கட்டம் நீங்கள் வரலாற்று விரிவுரையாளரால் அறுக்கப்படுவதற்குரியது. உங்களுக்கு மனமார்ந்த அநுதாபங்கள்' — என்று பெரிதாக எழுதிப் போட்டிருந்தான் யாரோ ஒரு குறும்புக்கார மாணவன். உள்ளே நுழைந்து பொறுமையாகப் 'பிளாக் போர்டில்' இருந்த அந்த வாக்கியத்தை அழித்துவிட்டு விரிவுரையைத் தொடங்கினார் அவர். வகுப்பு, பாட வேளைக்கான முழு நேரத்துக்கு முன்பே முடிந்து விட்டது. மூன்றாவது பாட வேளைக்கான பேராசிரியர் அன்று வரவில்லை. மாணவர்கள் எல்லோரும் நேரே பகல் உணவுக்காக மெஸ்ஸுக்குப் போய் விட்டார்கள். மெஸ்ஸில் உள்ளே வந்திருந்த சில மாணவர்கள் இன்னும் உள்ளே வராத தங்கள் நண்பர்களுக்காகச் சாவிக் கொத்து, கைக்குட்டை, புத்தகங்களை வைத்து உட்காரும் இடங்களை ரிசர்வ் செய்திருந்தார்கள். திடீரென்று நுழைந்த ஒரு மாணவன் ஏற்கனவே ஒரு நாற்காலியில் மற்றவன் போட்டிருந்த கைக்குட்டையை எடுத்தெறிந்துவிட்டுத் தான் முந்திக்கொண்டு சாப்பிட உட்காரவே, வாஷ்பேசினில் கைகழுவப் போயிருந்த கைக்குட்டையின் உரிமையாளன் திரும்பி வந்து இரைந்து கத்திச் சண்டை போடத் தொடங்கி அதுவே கைகலப்பாக முற்றிவிடும்போலிருந்தது. பாண்டியன் இருவருக்கும் நடுவே குறுக்கிட்டுச் சமாதானப்படுத்தி வைத்தான்.

பிற்பகல் வகுப்புக்கு அவன் போகவில்லை. இரண்டேகால் மணிக்கு நூல் நிலைய வாயிலில் கண்ணுக்கினியாளை எதிர்பார்த்து அவன் காத்திருந்தான். இரண்டரை மணிக்கு அவள் வந்தாள். வெளிர் நீல வாயில் புடவையோடு அப்போது அவன் தன்னைத் திரும்பத் திரும்பப் பார்க்க வைக்கும் கவர்ச்சி நிறைந்து அவன் எதிரே வந்து நின்றாள். அவளது மை தீட்டிய வசீகர விழிகளும், சிவந்த மாதுளை இதழ்களும் அவன் மனத்தைச் சூறையாடின. அவன் சொன்னான்: ''சினிமாப் பார்க்கப் போக வேண்டாம்! உன்னையே பார்த்துக் கொண்டு நிற்கலாம் போல் தோன்றுகிறது! ரொம்ப நாளைக்குமுன் லைப்ரரியில் 'நீபன்' எழுதிய '**அரும்பிய முல்லை**' என்ற புத்தகத்தில் ஒரு கவிதை படித்தேன். உன்னைப் பார்த்ததும் இப்போது மீண்டும் அந்தக் கவிதை தான் நினைவுக்கு வருகிறது.....''

'' எங்கே? அந்தக் கவிதையைத் தான் கொஞ்சம் சொல்லுங்களேன்.... நானும் தெரிந்து கொள்கிறேன்....''

''மங்கைப் பருவம்உன் மேனி முழுவதும்
பொங்கி வழியுதடி !
செங்கையின் வீச்சினிலும்—உன் தன்
செந்தமிழ்ப் பேச்சினிலும் — இள
அன்னநடை தன்னிலும் — நீ
அங்குமிங்கும் ஓடிஆடித் திரியும்
மின்னல் நடைதன்னிலும் — அந்த
மெட்டி குலுங்கும் இசை
தன்னிலும்—இள
மங்கைப் பருவம் பொங்கி
வழியுதடி !''

'' தப்பு! நான் இன்னும் மெட்டி அணியவில்லை......''

''அதனாலென்ன? சீக்கிரம் அணியச் செய்துவிட்டால் போகிறது.''

அந்தக் கவிதையைப் பாண்டியன் தன்னிடம் கூறியது அவளுக்கு மிகவும் பிடித்திருந்தது என்பது அவள் முகத்தின் இங்கித நளின உணர்வுகளிலிருந்து புரிந்தது. ஹில்வியூ தியேட்டர் வாசலுக்கு அவர்கள் போகும்போது படம் தொடங்க இன்னும் அரை மணி இருந்தது. நேரம் போக வேண்டுமே என்பதற்காக எதிரே இருந்த காப்பி ஹவுஸில்

நுழைந்து அவன் தனக்குத் தேநீரும் அவளுக்கு அவள் கேட்டபடி காப்பியும் ஆர்டர் செய்தான். கொண்டு வந்து வைத்த சர்வர் தேநீரை அவள் முன்பும் காப்பியை அவன் முன்பும் மாற்றி வைத்து விட்டான். பேச்சு சுவாரசியத்தில் இருவருமே அதைக் குடிக்கத் தொடங்கி ஒரு மடக்கு உள்ளே போனதும்தான் மாற்றம் தெரிந்தது.

''அடடா இது காப்பி!... நான் டீ தான் கேட்டேன்'' என்று மீதிக் காப்பியை அப்படியே கோப்பையோடு மேஜையில் வைத்தான் பாண்டியன். தேநீரை ஒரு மடக்குப் பருகியிருந்த அவளும் மீதித் தேநீரோடு கோப்பையை அவனருகே நகர்த்தினாள். இருவரும் ஒருவரையொருவர் குறும்புத்தனமாகப் பார்த்தபடி கோப்பைகளை மாற்றிக் கொண்டு அப்புறம் பருகினார்கள். பாண்டியன் குறும்பாக அவளிடம், ''இனி நாம் ஒவ்வொரு தடவை இங்கே வரும்போதும் இந்த சர்வர் இப்படியே மாற்றிக் கொடுத்தால் அவனுக்கு நிறைய 'டிப்ஸ்' தரலாம்'' என்றான். அவள் சிரித்தாள். அந்த வேளையில் அவர்களுக்கு உள்ளே இனிய உணர்வுகள் நிறைந்திருந்தன. மனம் இரண்டுமே ஒன்றாகி ஒரே விதமான உணர்வுகளால் இணைக்கப்பட்டதுபோல் இருந்தது. 'உள்ளூறக் கனிந்து ததும்பும் அளவற்ற பிரியத்தை எப்போது வார்த்தைகளால் சொல்லிக் கொள்வதற்கு முயல்கிறோமோ அப்படிச் சொல்லிக் கொள்வதற்கு முயலும் முதல் விநாடியிலேயே அதன்மேல் செயற்கை நிழல் வந்து படர்ந்து விடுகிறது' என்பதை உணர்ந்தவர்கள் போல் அவர்கள் அப்போது ஒருவருக்கொருவர் பேசிக் கொள்ளாமலே பரஸ்பரம் வைத்த கண் வாங்காமல் பார்த்துக் கொண்டிருந்தனர். மூன்றேகால் மணிக்குத் தியேட்டரில் நுழைந்தபோது படம் தொடங்க இன்னும் கால் மணி நேரமே இருந்தது.

அந்தப் படமும் உருக்கமான காதல் கதையை மையமாகக் கொண்டது. ஆங்கிலப் படமாதலால் பட்டுக் கத்தரித்தது போல் சுருக்கமாக எடுத்திருந்தார்கள். மூன்றரை மணிக்குத் தொடங்கி மாலை ஆறு மணிக்கு முடிந்து விட்டது. வெளியேறும்போது தான் தங்களைப் போலவே பல மாணவ மாணவிகளின் இணைகள் அங்கு படத்துக்கு வந்து திரும்புவதை அவர்கள் காண முடிந்தது.

படம் விட்டதும் சிறிது தொலைவு பேசிக் கொண்டே மலைச் சாலையில் உலாவச் சென்றார்கள் அவர்கள். இரவு உணவும் வெளியில் ஒரு ஹோட்டலிலேயே முடிந்தது. பத்து மணிக்குள் இருவருமே பல்கலைக் கழகத்துக்குத் திரும்பி அவரவர் விடுதிகளுக்குப் போய்ச் சேர்ந்து விட்டார்கள்.

மறுநாள் காலை தினசரிகளில் மாநில அமைச்சர்களில் ஒருவர் மாணவர்களைப் பற்றிப் பேசிய பேச்சு ஒன்று வெளிவந்திருந்ததைப் பாண்டியன் படித்த போது அவனுக்கு ஆத்திரம் மூண்டது. ''மாணவர்கள் தாங்கள் மாணவர்களாக இருப்பதாலேயே எதை எதிர்த்தும் எப்படியும் போராட முன் வருவார்களேயானால் அதன் பயனை நிச்சயம் அனுபவிப்பார்கள். படிப்பைத் தவிர அவர்கள் வேறு வழிக்கு வரக் கூடாது. விஷயங்களின் நியாய அநியாயங்கள் புரியக் கூடிய பக்குவம் வருமுன்னால் அரை வேக்காடுகளாக நம் நாட்டு மாணவர்கள் நடந்து கொள்வதாகவே நான் நினைக்கிறேன். பல்கலைக் கழகங்களும் கல்லூரிகளும் உருப்படவேண்டுமானால் அங்கே முதலில் மாணவர் யூனியன்களைக் கலைக்க வேண்டும். மாணவர் தலைவர்கள், செயலாளர்களைத் தேர்ந்தெடுப்பது நிற்க வேண்டும்'' என்று பேசியிருந்தார் அந்த அமைச்சர். கைசுத்தமில்லாமல் 'லஞ்சபூஷணம்' பட்டம் பெறத்தக்க அளவு மோசமான நடத்தை உள்ள அந்த அமைச்சர் மாணவர்களைப் பற்றி அப்படிப் பேசியிருந்தது மாணவர்கள் எல்லாரையுமே அவமானப்படுத்துவது போலிருந்தது. நல்ல வேளையாக அதே மந்திரி இரண்டு மூன்று தினங்களில் மல்லிகைப்பந்தலுக்கு வந்து 'பழச்சாறு தயாரிக்கும் தொழிற்சாலை' ஒன்றைத் தொடங்கி வைக்க இருப்பதாகவும் பத்திரிகைகளில் அன்றே வேறொரு பகுதியில் அறிவிக்கப்பட்டிருந்தது.

உடனே நண்பர்களைக் கலந்து பேசிக் கரியமாணிக்கத்தின் அமைச்சரவையைச்



## சத்திய வெள்ளம்

**''உள்ளூறக் கனிந்து ததும்பும் அளவற்ற பிரியத்தை எப்போது வார்த்தைகளால் சொல்லிக் கொள்வதற்கு முயல்கிறோமோ, அப்படி வார்த்தைகளால் சொல்லிக் கொள்வதற்கு முயலும் முதல் விநாடியிலேயே அதன்மேல் செயற்கை நிழல் வந்து படர்ந்து விடுகிறது.''**



## பறந்தது புன்னகை!

பெங்களூர் எச். எம். டி. தொழிற்சாலையில் புது ரக ஆட்டோமேடிக் கைக்கடிகாரங்கள் தயாரிக்கப்பட்டு அதன் வெளியீட்டு விழா நடந்தது. நகரப் பிரமுகர்களும் அரசியல்வாதிகளும் அழைக்கப்பட்டிருந்தனர் விழாவிற்கு. மத்திய அமைச்சர் சி. சுப்பிரமணியம் தான் பிரதம விருந்தினர். விழாவில் முக்கியஸ்தர்கள் ஒவ்வொருவருக்கும் இப் புது கைக்கடிகாரம் ஒன்று அன்பளிப்பாகக் கொடுக்கப்பட்டது. எல்லோர் முகத்திலும் ஒரே மகிழ்ச்சி. கடிகாரத்தைப் பெற்றுக் கொண்ட அமைச்சர் ''இதற்கான பில் எங்கே?'' என்றார். அதிகாரிகள், ''இதற்குப் பணம் பெற்றுக் கொள்வதாய் இல்லை. அன்பளிப்புத்தான்'' என்று சொல்ல, உடனே அமைச்சர் கடிகாரத்தைத் திருப்பிக் கொடுத்து விட்டார். மற்றும் பிரமுகர்களும் அவரைப் பின்பற்ற வேண்டியதாகி விட்டது. பாவம்! ஒருவர் முகத்திலாவது ஈயாடவில்லை.

—டைம்ஸ் ஆப் இந்தியா - 'கரிகாலன்'

சேர்ந்த அந்த மந்திரிக்குக் கறுப்புக் கொடி காட்டித் ''திரும்பிப்போ'' என்ற முழக்கங்களோடு எதிர்கொள்ள ஏற்பாடு செய்தான் பாண்டியன். ஆனால் போலீஸார் அதை எப்படியோ அறிந்து பல்கலைக் கழகப் பகுதியை விட்டு மாணவர்களே வெளியேற முடியாதபடி மந்திரி வருகிற தினத்தன்று தடை உத்தரவுகள், ஐந்து பேருக்கு மேல் கூடி நிற்க முடியாதபடி ஆணைகள் எல்லாம் பிறப்பித்து விட்டார்கள். எப்படியும் அந்த மந்திரிக்குத் தங்கள் அதிருப்தியைக் காட்ட விரும்பிய பாண்டியன் கண்ணுக்கினியாள் மூலம் நூற்றுக்கு மேற்பட்ட மாணவிகளை இரகசியமாகத் தயார் செய்து கைக்குட்டைகள் போல் சிறிய சிறிய கறுப்புத் துணிகளை மறைத்து வைத்திருக்கச் சொல்லி, பெண்கள் விடுதியை யொட்டிய சாலையை மந்திரி கடக்கும்போது கறுப்புக் கொடி பிடிக்கவும், 'திரும்பிப் போ' என்ற வாசகம் அடங்கிய அட்டைகளைக் காண்பிக்க வைப்பதற்கும் இட்டமிட்டிருந்தான். தடையை மீறுவதற்காகவோ, கறுப்புக் கொடி காட்டுவதற்காகவோ மாணவர்களைத் துன்புறுத்துவது போல் மாணவிகளைப் போலீஸார் துன்புறுத்த முடியாது என்பதை உணர்ந்தே மாணவிகளிடம் அந்தப் பொறுப்பை விட்டிருந்தான் பாண்டியன். இடுப்பில் மறைத்த கறுப்புக் கைக்குட்டையும் குச்சியுமாக எதேச்சையாக நிற்பதுபோல் நின்ற பல மாணவிகளும், கண்ணுக்கினியாளும் மந்திரியின் ஜீப் அருகே நெருங்கியதும் இடுப்பில் மறைத்திருந்த கறுப்புத் துணிகளை எடுத்துக் குச்சி நுனியில் செருகி நீட்டி எதிர்ப்புக் குரல்களை முழக்கினார்கள். 'மாணவர்களை அவமதிக்கும் மந்திரியே! திரும்பிப் போ', 'மாணவர் உரிமைகளைப் பறிக்க முயலும் எதேச்சாதிகாரியே! திரும்பிப் போ' — என்று குரல்கள் எழுந்த சுவட்டோடு கறுப்புக் கொடிகள் திடீரென்று முளைத்ததும் பெரிய போலீஸ் அதிகாரி ஒருவர் ஓடிவந்து கைகளை உயர்த்திக் கூப்பாடு போட்டு மாணவிகளை மிரட்டி அனுப்ப முயன்றார். கண்ணுக்கினியாள் அவரிடம் கூறினாள்: ''எங்களை நீங்கள் தடுக்க முடியாது! ஜனநாயக நாட்டில் இந்த உரிமை எங்களுக்கு உண்டு. இப்போது ஜீப்பில் போகிற இதே மந்திரி முன்பு பதவிக்கு வராத காலத்தில் மனித குல மாணிக்கம் நேருவுக்கே, அவர் சென்னை வந்தபோது கறுப்புக் கொடி காட்டியிருக்கிறார். இப்போது தமக்குக் கறுப்புக் கொடி காட்டுகிறவர்கள் மேல் இவர் கோபப்படுவானேன்? சரித்திரம் திரும்புகிறது.''

ஒன்றும் செய்யத் தோன்றாத போலீஸ் அதிகாரி மாணவிகளை அமைதியாகக் கலைந்து போகுமாறு நயமாக வேண்டினார். ''மாணவிகளாகிய நீங்கள் மாணவர்களைப் போல் முரட்டுத்தனமாக நடந்துகொள்ளக் கூடாது. உங்களிடம் இப்படிப்பட்ட காரியங்களை நாங்கள் எதிர்பார்க்கவில்லை'' என்றார்.

''அதனால்தான் நாங்கள் இதைச் செய்கிறோம். நீங்கள் எதிர்பார்ப்பதை மட்டுமே நாங்கள் எப்படிச் செய்ய முடியும்?'' என்று அவரிடம் பதிலுக்குக் கேட்டாள் கண்ணுக்கினியாள். போலீஸ் அதிகாரி பேசாமல் விலகி நின்றுவிட்டார். கறுப்புக் கொடி ஆர்ப்பாட்டம் நடந்து முடிந்தது. ஆனால் அந்தப் போலீஸ் அதிகாரி கோபத்தோடு கண்ணுக்கினியாளின் பெயரை விசாரித்துக் குறித்துக் கொண்டார். அதைப் பற்றி அவள் கவலையோ பதற்றமோ அடையவில்லை. கறுப்புக் கொடி ஆர்ப்பாட்டம் முடிந்து மாணவிகளோடு அவள் விடுதிக்குத் திரும்பி ஒரு மணி நேரம் கழித்துப் பெண்கள் விடுதியின் பிரதம வார்டன் அம்மையார் உடனே வருமாறு அவளைத் தன் அறைக்குக் கூப்பிட்டு அனுப்பினாள். வார்டனின் அறைக்குள் கண்ணுக்கினியாள் நுழைந்தபோது அந்த அம்மையார் மிகவும் கோபமாக முகத்தில் எள்ளும் கொள்ளும் வெடிக்க அவளை எதிர்கொண்டாள். ''நீ படிக்கத்தானே இங்கே வந்திருக்கே?'' என்ற வார்டனின் முதல் கேள்வியே கடுமையாக முகத்தில் அறைவது போல் இருந்தது. (தொடரும்)

# வாண வேடிக்கைக்கு ஏற்ற இடம் உங்கள் சமையலறை அல்ல!

வாணவேடிக்கை காணத் தமாஷாயிருக்கும். ஆனால் அதுவே சமையலறையில் நடந்தாலோ வந்தது மோசம்! ஸிலிண்டரோடு பர்னரை இணைத்திடும் வளை குழாயை அலட்சியம் செய்தோமானால் அது நேர்ந்து விடும். ரீஃபில் இணைக்கப்படும் ஒவ்வொரு தடவையும் வளை குழாயைப் பரிசீலித்து, பழுது ஏதேனும் தென்பட்டால் அக் கணமே மாற்றுறுப்புப் போட்டுவிடவும்.

உங்கள் வீட்டிலே தீ விபத்து நேருவதைத் தடுக்க வேண்டுமானால், செய்ய வேண்டியவை, செய்யக் கூடாதவை என்னென்ன என்பதற்கான முக்கிய விதிகள் இதோ:

**செய்ய வேண்டியவை** ■ உபயோகத்திலில்லாத போது ஸிலிண்டர் வால்வையும், பர்னர் குமிழ்களையும் மூடிய நிலையில் வைத்துக்கொள்க. ■ ரீஃபில் ஸிலிண்டரை இணைத்திடும் போது எல்லா நெருப்புக்களும் அணைக்கப்பட வேண்டும். ■ ஸிலிண்டரை இணைத்தான பின், ரெகுலேட்டர் ஜாயிண்டுகளின் இணைப்புறுதியை சோப்பு நீரினால் பரிசோதிக்கவும். ■ ஸிலிண்டர் வால்வுகளைத் திறக்க, கைத்திருகு சக்கரத்தை இடச்சுற்றாக அரைவட்ட அளவுக்கு இலேசான அழுத்தமுடன் திருப்பினால் போதும் ■ மூட்டுவதற்கெனக் குமிழைத் திருப்புமுன்னமே, பற்றவைத்த தீக்குச்சியை பர்னரில் காட்டவும் ■ ரீஃபில் இணைக்கப்படும் ஒவ்வொரு தடவையும் வளைகுழாயின் நிலையைப் பரிசீலித்துத் துப்புரவாக வைத்துக்கொள்க.

**கூடாதவை** ■ ஸிலிண்டரை படுக்க வைக்கக்கூடாது. ■ ஸிலிண்டரை நீங்களாகவே சுழற்றவோ, நோக்கவோ கூடாது; வீடு மாற்றும் போதோ, சுழற்றி நோக்கும் வேலைகளை உங்கள் விநியோகஸ்தரிடம் விடுங்கள். ■ ஸிலிண்டர் வால்வுகள், பிரஷர் ரெகுலேட்டர் பர்னர், எதனையும் நீங்களாகவே சரியமைக்கவே கூடாது. ■ ரெகுலேட்டரிலிருந்தோ, பர்னரிலிருந்தோ வளை குழாயை இழுக்கக் கூடாது. மீறினால் விபத்து நேரிடக் கூடும். ■ சூடேறும் இடத்தின் அருகே வளை குழாயை வைக்கக்கூடாது.

விதிமுறைக் குறிப்புக் கார்டை உங்கள் விநியோகஸ்தரிடமிருந்து பெற்றுக்கொண்டு, அதிலுள்ள விதிகளைக் கண்டிப்புடன் பின்பற்றவும்.

**Indane** இண்டேன்—பாதுகாப்பிலே எந்த சமையல் எரிபொருளுக்கும் நிகர்

விற்பனைக்கு விடுப்போர்:

**இண்டியன் ஆயில் கார்ப்பொரேஷன் லிமிடெட்**





TA/..  Dattaram 100-...

# கவர்ச்சி தேவையா?

குயிலி ராஜேஸ்வரி



மாதவன் வீடு மிக அமர்க்களப்பட்டுக் கொண்டிருந்தது அன்று. அவருடைய அருமைக் குமாரத்தியைப் பெண் பார்க்க வருவதாக இருந்தது. விருந்தினர்களை வரவழைக்கவும், உபசரிக்கவும் ஏற்பாடுகளைப் பிரமாதமாகச் செய்து கொண்டிருந்தாள் ஸ்ரீமதி பாமா மாதவன்.

சாதாரணமாகவே, அந்தக் குடும்பத்தினருக்கு மேனாட்டு நாகரிகத்தில் ஒரு பித்து. இன்று கேட்க வேண்டுமா ? பெண் பார்க்க வரப் போகிறார்களே! அவர்களை அயர்ந்து போகச் செய்ய வேண்டாமா? அதற்காகவே பார்த்துப் பார்த்துப் பல புதுமைகளைச் செய்து கொண்டிருந்தாள் பாமா. நவீனப் புதுமைகளும், மேல்நாட்டிலிருந்து இறக்குமதி செய்யப்பட்ட கவர்ச்சிப் பொருள்களும் வரவேற்பு அறையை நிரப்பிக் கொண்டிருந்தன. கீழே விரிக்கப்பட்ட விரிப்புக்கள், பிளாஸ்டிக் மிதியடி, எல்லாமே நவீன பாணியில் இருந்தன. அத்துடன், அயல்நாட்டிலிருந்து அரியபொருள்களை வரவழைக்கும் வசதியும் செல்வாக்கும் அவர்களுக்கு இருக்கின்றன என்பதை எடுத்துக்காட்டுவது போலவும் தோன்றியது. தொங்கும் சர விளக்குகள், அறையின் சுவர்களில் ஒளி விடும் உயர்விளக்குகள் எல்லாம் மாதவனின் லக்ஷ்மி கடாக்ஷத்தையும் அவர் இல்லத்தரசி பாமாவின் கலையார்வத்தையும் தெளிவாக எடுத்துக் காட்டுவனவாக இருந்தன,

தான் ஒரு பெரிய சமூக சேவகி என்று பெருமிதம் கொள்ளும் பாமாவுக்கு எதையும் தானே செய்ததாகச் சொல்லிக் கொள்வதில் ஒரு தனிப் பெருமை; தன்னுடைய இளமைத் தோற்றத்தைப் பலரும் பார்த்துப் பாராட்ட வேண்டும், பெருமைப்பட வேண்டும் என்று ஓர் ஆசை. அதற்காகவே, அவள் அதிக அக்கறையும், நேரமும் எடுத்துக் கொண்டு இளம் குமரியைப் போல் தன்னை அலங்கரித்துக் கொள்வாள்.

இன்று விசேஷ விருந்தினர்கள் வருகிறார்களே? அதற்கான ஏற்பாடுகளையெல்லாம் செய்வதோடு நின்றுவிட முடியுமா ? பாமா தன்னையும், பிரமாதமாக ஒப்பனை செய்து கொள்வதில் கவனம் செலுத்தினாள்.

அப்பொழுதுதான் ஹாலுக்கு வந்த அவள் மாமனார், ''என்ன பாமா! உன் பெண்ணுக்கு எப்படி அலங்காரம் செய்துகொள்ள வேண்டும் எனக் கூறிவிட்டாயா ?'' என்று வினவினார்.

''இதில் நான் சொல்லித் தர என்ன இருக்கிறது? அவளுக்கே தெரியாதா ? பி. ஏ. பட்டம் வாங்கிய பெண்ணுக்கு இந்தச் சந்தர்ப்பத்தில் எப்படி உடுத்த வேண்டும் என்று சொல்லியா தரவேண்டும்?'' என்றாள் அவள் ஓர் அலட்சியத்தோடு.

குறித்த நேரத்தில் சொன்னபடி பிள்ளை வீட்டினரும் வந்தனர். அவர்களை, ஆங்கில பாணியில் மாதவன் தம்பதியர் வரவேற்றனர். பிள்ளை வீட்டார் வீட்டிலுள்ள பொருள்களையும், அவைகளை வைத்திருக்கும் பாங்கையும் வெகுவாகப் பாராட்டினர். வழக்கம் போல் பாமாவும் எல்லாம் தன்னுடைய ஏற்பாடு என்று கூறிப் பெருமைப் பட்டுக் கொண்டாள்.

பெண் சீதாவின் ஆற்றல், திறமை இவைகளைப் பற்றி ஒரு வார்த்தை பேசவில்லை. தன் சாமர்த்தியங்களையும், திறமைகளையும் பற்றியே பேசித் தீர்த்து விட்டாள்.

மாதவனும் நாகரிக வாழ்க்கைக்கு ஏற்பத் தம் மனைவியின் பெருமையைப் பிரமாதமாகக் கூறிக் கொண்டு, தாங்கள் இன்னும் யௌவன மன நிலையோடு இருப்பதையும் அமர்க்களமாகப் பறைசாற்றிக் கொண்டார்.

கணவன், மனைவி இருவருமே சிறு வயதினர் போல் உடுத்திக் கொண்டிருப்பதும், ஒவ்வொரு செயலிலும் அந்த எண்ணத்தின் அடிப்படையிலேயே இயங்குவதும் வந்தவர்களுக்குச் சிறிது வியப்பாகவே இருந்தன. சீதாவைப் பற்றி மாதவன் பேசியதெல்லாம் குழந்தைகளை வளர்ப்பதில் தன் மனைவிக்கு உள்ள திறனை எடுத்துக் கூறும்பொழுதுதான்!

"உங்கள் பெண்ணைவிட நீங்கள் பார்ப்பதற்கு இளமையாகவும், பொலிவாகவும் இருக்கிறீர்கள்!" என்றாள் பிள்ளையின் அன்னை.

இந்தப் புகழ்ச்சியைக் கேட்டதும் பூரித்துப் போய்விட்டாள் பாமா. 'உங்களுக்கு அருமையான ரசனை உணர்வு இருக்கிறது' என்று பாமா உள்ளே சென்று அவர்களுக்குப் பலகாரங்களைக் கொண்டு வர முற்பட்டாள். அவளைத் தொடர்ந்து கோப்பையில், காப்பியை நிரப்பி எடுத்துக் கொண்டு வந்தாள் சீதா.

"பலகாரங்கள் சுவையாக இருக்கின்றனவா என்று பார்த்து உண்மையாகச் சொல்ல வேண்டும். உங்களுக்காகவே, நானே இதை ஸ்பெஷலாகத் தயாரித்தேன்" என்றாள் பாமா, பூரிப்பாக அவர்களைப் பார்த்து.

"அப்பாடி! இந்த ஒரு வீட்டிலாவது உண்மையைக் கேட்டேனே! எல்லா வீடுகளிலும் அன்னைமார்கள் தயாரித்துவிட்டுப் பெண் தான் தயாரித்தாள் என்று ஒரேயடியாகச் சாதிப்பார்கள்" என்று சொல்லிக் கலகலவென்று சிரித்தான் பையன்.





பெரிய ஹாஸ்யமாகக் கருதி உடன் இருந்தவர் எல்லோரும் உரக்க நகைத்தனர்.

பெண் பார்க்கும் படலமும் ஒருவாறு முடிந்தது.

புறப்படும் பொழுது, "மிஸ்டர் மாதவன்! நீங்கள் ரொம்ப அதிர்ஷ்டக்காரர். சாமர்த்தியசாலியான அழகு மனைவி உங்களுக்கு" எனக் கூறிக் கைகுலுக்கிவிட்டுச் சென்றார் பிள்ளையின் தந்தை.

நாட்கள் ஒன்று ஒன்றாக ஒரு வாரமும் ஓடியது. பெண் பார்த்துவிட்டுப் போனவர்களிடமிருந்து எந்த பதிலும் வரவில்லை. 'மேற்கொண்டு என்ன செய்வது? அவர்களை நேரிடையாகக் கேட்பதா? கடிதம் எழுதுவவதா?' என்ற பிரச்னை மாதவனை வாட்டியது.

அன்று மாதர் சங்கத்திலிருந்து வந்த பாமா டம்பப் பையைத் தூக்கிச் சோபாவில் வீசிவிட்டு, "கேட்டீர்களா, செய்தியை? அன்று சாமர்த்தியமாகப் பேசிவிட்டு வக்கணையாக டிபன் சாப்பிட்டுவிட்டுப் போனார்களே, அவர்கள் தங்கள் பிள்ளைக்கு ஜானகியின் பெண்ணை நிச்சயம் செய்து விட்டார்களாம். எனக்குத் தெரியும், அந்தப் பெண் மகா அசடு. ஜானகி, அவளைப் பற்றிப் பிரமாதமாகக் கூறி அவர்கள் தலையில் கட்டிவிட்டாள்! என்ன சாமர்த்தியம் பார்த்தீர்களா?" எனக் கூறிப் பெருமூச்சு விட்டாள்.

பத்திரிகையைப் படித்துக் கொண்டிருந்த மாதவன், "அப்படியா?" என்றார் தலையை நிமிர்த்தி.

"பின் என்ன? நான் கேட்டுச் சொல்லும் விஷயம்கூடப் பொய்யாகுமா?" என்று ஆத்திரம் பொங்கக் கேட்டாள் பாமா.

## ஏர் இந்தியாவுக்குப் புதிய மானேஜிங் டைரக்டர்



ஏர் இந்தியா ஸ்தாபனத்துக்கு திரு கே. கே. உன்னி புதிய மானேஜிங் டைரக்டராகப் பதவி ஏற்கவிருக்கிறார். நிர்வாகத் துறை அதிகாரி ஒருவரை மானேஜிங் டைரக்டராக நியமிப்பது இதுவே முதல் தடவை. இதுவரை விமானத் துறையில் சிறந்தவர்களே நியமிக்கப்பட்டு வந்தனர். திரு உன்னி உதவி மானேஜிங் டைரக்டராகத் தற்போது இருந்து வருகிறார். 1942ல் சர்க்கார் உத்தியோகத்தில் சேர்ந்த திரு உன்னிக்கு நீண்ட நாள் அனுபவமும் திறனும் இப் புதிய உயர் பதவியைப் பெற்றுத் தந்துள் ளன. அவரது நிர்வாகத்தில் ஏர் இந்தியா மேன்மேலும் சிறப்புற வாழ்த்துகிறோம்.

''இதிலே இவ்வளவு கோபப்பட என்ன இருக்கு?'' என்றவாறு ராமாயணத்திலிருந்து தலையைத் திருப்பினார் மாமனார் ராமநாதன்.

''என்னவென்று கேட்கிறீர்கள்? ஜகதத்தின் பெண்ணைவிட நம் சீதா என்ன குறைந்து விட்டாள்? எந்தக் குறையைக் கொண்டு நம் சீதாவை ஒதுக்கினார்கள் அவர்கள்?''

''பொருள் விற்பனையாவது பொருளின் தரத்தாலும் குணத்தாலும் மட்டும் இல்லே பாமா. முக்கியமாக அதை எடுத்துக் கூறும் திறத்தால்தான். அந்தக் கோணத்தில் ஜகதம் உன்னைவிடக் கெட்டிக்காரி என நிரூபித்து விட்டாள். பெண் பார்க்கப் பிள்ளை வீட்டார் வந்தால், அவர்களிடம் பெண்ணின் பெருமையையும், திறனையும்தான் எடுத்து, சற்றுச் சாமர்த்தியத்தோடு ஓரளவு அதிகமாகவே கூற வேண்டும். அதை எல்லாம் விட்டுவிட்டு, உன்னைப் புகழ வேண்டும் என்பதற்காக உன் பெருமையையே பேசிக் கொண்டிருந்தால், உன் பெண்ணை மருமகளாக்கிக் கொள்ள அவர்களுக்கு என்ன அக்கறை? பெண்ணுக்குச் சாமர்த்தியம் ஒன்றும் இல்லே, அம்மாவின் திறனில் வண்டி ஓடுகிறது என்றுதானே நினைக்கத் தோன்றும்? மேல் நாட்டினரைப் போல், இளமையான தோற்றமும், செயலும் இருக்க வேண்டும் என்றாலும் அதற்குச் சந்தர்ப்பம் கிடையாதா? உன் கணவருடன் செல்கையில் அப்படித் திகழலாம் நீ. ஆனால் உன் பெண்ணுக்குத் திருமணம் பேசுகையில், அவளுக்கு இணையாகவா நீ சிங்காரித்துக் கொள்வது? உன் வயதுக்கும், முக்கியமாக அன்னை என்ற பதவியின் பொறுப்புக்கும் ஏற்ற சாதாரண உடையில் அல்லவா நீ திகழ வேண்டும்? அப்பொழுதுதானே உன் மகளின் அழகும் பெருமையும் வந்தவர்களுக்குப் புலப்படும். ஜகதம், தன் புகழுக்கு ஆசைப் படவில்லே. தன்னைப் பிறர் போற்ற வேண்டும் என்றும் நினைக்கவில்லே. பெண்ணைச் சிறந்த இடத்தில் சேர்க்க வேண்டுமே என்ற ஒரே நினைப்புத்தான்! ஒரு தாயின் கடமையை உணர்ந்து செய்ய வேண்டியதைப் பாங்காகச் செய்துவிட்டாள். நாகரிகம் எனக் கருதி, உன் திறனையும், பணப் பெருமையையும் நீ பறைசாற்றினாயே தவிர, முக்கியமாகக் கூற வேண்டிய பெண்ணின் திறனை, அறிவை எடுத்துச் சொல்ல வில்லேயே! உன்னைப் பார்த்து அவர்கள் என்ன நினைத்திருப் பார்கள்? இவ்வளவு கெட்டிக்காரி, பெரிய மனுஷி பெண்ணைப் பற்றி எதுவுமே கூறவில்லேயே, வாய் திறக்கவில்லேயே! பெண்ணுக்கு எந்தச் சாமர்த்தியமும் இல்லே போலும்! பொய் சொல்லக் கூடாது எனப் பெருந்தன்மையாக அதைப் பற்றிப் பேசாமல் இருந்துவிட்டாள் பாமா எனத் தங்களுக்குள் தீர்மானம் செய்து கொண்டிருப்பார்கள். இது யார் குற்றம்?'' என ஆணித்தரமாகக் கேட்டார் ராமநாதன்.

பெண் பார்க்க வந்தவர்களிடம், பெண் தான் எல்லாவற்றையும் செய்தாள் எனக் கூறுவதில் தவறே இல்லே; அதில் பெரிய மனத் தத்துவமே புதைந்திருக்கிறது என்பதை அப்பொழுதுதான் அன்னை பாமா புரிந்து கொண்டாள்.

''அப்பா கூறுவது முற்றிலும் நியாயம்'' என்று எப்படியோ தைரியத்தை வரவழைத்துக்கொண்டு சொல்லிவிட்டார் மாதவனும்.

சிலிர்த்துக் கொண்டாள் பாமா. எதிரில் உள்ள கண்ணாடியில் தன் உருவத்தைப் பார்த்தபொழுது அவளுக்கே அருவருப்பாக இருந்தது. 'சே! சே! சிறு பெண்ணைப் போல் என்ன வேஷம் இது? வயதுக்கும் பொறுப்புக்கும் உள்ள தோற்றமும், செயலும் இல்லேயானால், எதைத்தான் சாதிக்க முடியும் சமூகத்தில்?' என்று தோன்றியது.

பரபரவென்று உள்ளே சென்றவள் பாங்காகத் தன் வயதுக்கு ஏற்ப உடை யுடுத்தி வந்தாள். ''வாருங்கள், நேற்று உங்கள் நண்பர் ஓர் இடம் கூறினாரே, அதை நாமே போய்ப் பார்த்து விடுவோமே?'' என்றாள் கணவரை நோக்கி.

ராமநாதனின் முக மலர்ச்சியே, அவர் பாமாவை மன்னித்துவிட்டார் என்பதைக் காட்டியது. பாமா இனிமேல் மாற மாட்டாள், தோற்க மாட்டாள் என்ற நம்பிக்கையும் அவருக்குப் பிறந்தது.

Printed & Published by R. Ananthanarayanan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at Kalki, Press, Chetput, Madras-600031
Managing Editor: T. Sadasivam

Registered No. M. 4392
Registered as a Newspaper in Ceylon இலங்கையில் விலை 45 சதம் (தபால் செலவு தனி)